ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



திவ்யகவி

பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்

அருளிச்செய்த

# பரப்பிரமவிவேகம்.

---

திருநறையூர்நம்பி.

# மேகவிடுதூது.

---

இவை

தமிழ் பண்டிதர்

காரப்பங்காடு. ஸ்ரீ கோபாலாசாரியர் ஸ்வாமியால்

பரிசோதிக்கப்பெற்று

---

செல்வீருப்பம்

ஸ்ரீமான். ஆ. நாராயண் இராமாநுஜ நாயுடு

வேண்டுகோளின்படி

கோயில் கந்தாடை அண்ணன்ஸ்வாமி திருவம்சம்பந்தியும்

ஸ்ரீவைஷ்ணவ பாததூளியாகிய

கா. வெ. திருக்கச்சிநம்பி தாஸரால்,

---

திருவல்லிக்கேணி

ஆம்ப்தில் அச்சுக்கூடத்தில்,

பதிப்பிக்கப்பட்டது.

---

1908.

இதன் விலை அணா—2.

ஹரி:ஓம்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# பரப்பிரமவிவேகம்.

## ப்ரவேசம்.

நித்திய விபூதியாகிய பேரின்பவீட்டில் நித்யர் முக்தர் ஸேவிக்கும்படி வீற்றிருக்கிற ஸ்ரீமந்நாராயணன் ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்து லீலாவிபூதியிலுள்ள சேதநர்களுஜ்ஜீவிக்க அர்ச்சாவதாரமா யெழுந்தருளியிருக்கிற திவ்ய தேசங்களிற் சிறப்புற்றோங்கிய திருவரங்கம் பெரியகோயிலில், உலகத்திலுள்ள சேதனர்களைத்திருத்தி ஸ்ரீமத் வேதமார்க்க தரிசநத்தில் செலுத்தியருள ஸ்ரீபெரும்பூதூரில் திருவவதாரஞ்செய்தருளி மாயாவாத முதலிய மார்க்கங்களைத் திரஸ்கரித்து ஸ்ரீ விசிஷ்டாத்வைத தரிசநத்தை நிலைநாட்டிப் பராங்குசரால் அளிக்கப்பட்ட பரமையக்கோளரியென்னும் திருநாமம்பெற்று, எழுந்தருளியிருந்த ஸ்ரீஉடையவருடைய திருவடிஸம்பந்தியாய், பிரபந்நகாயத்திரியைத் திருவாய் மலர்ந்தருளிய ஸ்ரீபாதமுதலி வம்சதிலகராய், திருவரங்கத் தமுதனார் திருப்பேரனாராகிய அழகியமணவாள தாசர் என்கின்ற திவ்யகவிப் பிள்ளைப்பெருமாளையங்கார், நம்பெருமாள் முதலிய சில திவ்யதேசப்பெருமாள்களின்மீது தமிழ்ப்பிரபந்தங்கள் பல செய்தருளுங்காலத்தில், தமிழிலக்கண விலக்கியங்களைக் கற்று வல்ல சிறந்த புலவர்கள் பலரும் இவருடைய கவிகளில் சொன்னோக்குப் பொருணோக்கு முதலியவற்றைக் கண்டுங் கேட்டும் கொண்டாடுவதை ஆனைக்காவிலிருந்த ஆகமவாதிகள் கேள்விப்பட்டு, இப்படிப்பட்ட வித்துவானால் நம்முடைய சம்புகேசுரச் சிவபெருமான்மீது ஒரு பிரபந்தம் பாடுவித்துக் கொள்ளவேண்டுமென்னுங் கருத்துடையவர்களாய், ஒரு நாள் இவருடைய திருமாளிகையில் வந்து

---

† பரப்பிரம விவேகம் என்னும் இந்நூல் ஐயங்கார் செய்தருளியதென்று பலர் கூறுவராயினும் இதன் சொன்முடிபு பொருண்முடிபு கவியமைதி முதலியவற்றை நோக்குமிடத்து இது திவ்யகவிப்பிள்ளைப் பெருமாளையங்காருடைய வாக்கென்று துணிதற்கு இடமில்லை.

தங்கள் கருத்தைவெளியிட, அதுகேட்டருளித் திரிகரணத்தாலும் தேவதாந்தரத்தைப் பற்றறவிட்ட சுத்த ஸத்துவ தொண்டக்குல ஸ்ரீ வைஷ்ணவ சிகாமணியாகிய ஐயங்கார் புன்னகை கொண்டு "யாம் அரங்கனைப்பாடின வாயினால் மற்றொரு குரங்கனைப் பாடுவதில்லையே" எனத்திருவாய்மலர்ந்தருளக்கேட்டு, "குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்ளுமவரைப்போல, நம்முடைய பரமசிவத்தின்மீது பாடல் பெற்றுக்கொள்ள வந்து குரங்கனென்னும் சொல்லைப் பெற்றுக்கொண்டோமே" யென்று மனம் பொருதவர்களாய்ச் சடக்கென வெழுந்திருந்து "எவ்வகையினாலாவது உம்முடைய வாக்கினால் எங்கள் பரமசிவத்தின்மீது ஒரு பாடலேனும் பெற்றுக்கொள்ளுகிறோம்" என்று சபதங்கூறிப் போய் அதற்கு வகை தேடிக்கொண்டிருந்தனர்.

இப்படி யிருக்கையில், கோயிலில் உதயத்தில் திருக்காப்பு நீக்கி நம்பெருமாளுக்குச் செய்யும் கைங்கரியமாகிய விசுவரூபதரிசனஞ் செய்விக்கப்போகிற சமயத்தில் கொண்டுபோய் அர்ச்சகர் சமர்ப்பிக்கிற பொருள்களில் ஒன்றாகிய கபிலையென்கிற பசுவானது * ஒருநாள் ஆனைக்காவைச்சார்ந்த ஒருபுலத்தில்மேய, அதை மேற்கூறிய ஆகமவாதிகள் பிடித்து இதனால் தாம்கொண்ட கருத்தை முடித்துக் கொள்ளலாமென நினைத்துக் கட்டி வைத்தனர்; அன்றிராத்திரி கோயிலில் அர்ச்சகர் முதலாயினோர் விசுவரூப தரிசனப் பசுவைக் காணாமல் தேடிக்கொண்டு போகையில் ஆனைக்காவிலிருக்ககண்டு, ஆகமவாதியர்களைப் பசுவைக் கொடுக்கும்படி கேட்க அவர்கள் "உங்களுடைய பிள்ளைப்பெருமாளையங்கார் வந்து கேட்டால் தருகிறோம்" என்று சொல்ல, அது கேட்டு விசுவரூபதரிசனத்துக்கு ப்ராதக்காலத்தில் வேண்டுமே யென்று மெண்ணத்தினால் அதை மறுத்து ஒன்றும் பேசாமல்

---

* விசுவரூபதரிசனப் பொருள்களில் கபிலையும்
ஒன்றென்பதற்குப் பிரமாணம்.

வம்பவிழ்வானவர் வாயுறைவழங்க
மாநிதிகபிலையொண்கண்ணாடிமுதலா
எம்பெருமான்படிமைக்கலங்காண்டற்
கேற்பனவாயினகொண்டுநன்முனிவர்
தும்புருநாரதர்புகுந்தனரிவரோ
தோன்றினனிரவியுந்துலங்கொளிபரப்பி
அம்பரதலத்துநின்றகல்கின்றதிருள்போய்
அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே.

ஒப்புக்கொண்டு பரபரப்புடன்சென்று ஐயங்காரிடத்தில் விண்ணப்பஞ் செய்ய, "மறந்தும் புறந்தொழாமாந்தர்" என்கிறபடியே அந்தப்பிரபந்த நிஷ்டானுபவராகிய வைதிகவைஷ்ணவரானவர் அதுகேட்டருளி "துஷ்கர்மகாலந்தவிர மற்றைக்காலத்தில் ருத்திரபூமியில் அடிவைப்பது கூடுமோ? அன்றியும் அவ்வாலயத்தில் பிரவேசிப்பது வைதிக வைஷ்ணவனுக்குத் தக்கதன்று; 'ஆனை துரத்திவந்தாலும் ஆனைக்காவில் நுழையாதே' என்கிறபழமொழியையேனுங் கேட்டதில்லையோ; ஆதலால் அந்த ஆகமவாதியர்களைக் கோயிலிடத்தில் அழைத்து வாருங்கள்" எனச்சொல்லினர். அவ்வாறே அந்த ஸ்ரீவைஷ்ணவர்களும் ஆனைக்காவில்சென்று அவர்களுக்குச் சொல்ல, எவ்வகையாலாயினும் ஐயங்காரால் ஒருபாடல் பெற்றுக்கொள்ள எதிர்பார்த்துக்கொண்டிருந்த அவர்களும் "நம்முடைய எண்ணம் நிறைவேறுங் காலமிதுதான்" என்று அதற்கொப்புக்கொண்டு, அதிக சந்தோஷத்தோடு அக்கபிலையையும் ஓட்டிக்கொண்டு, ஐயவிஜயர்கள் எழுந்தருளியிருக்கும் சந்தநு மண்டபத்தில் வந்து சேர்ந்தனர். ஐயங்காரும் அவ்விடத்தி லெழுந்தருளிக் "கபிலையை விடுவதற்கு உங்களுடைய கருத்தேது" என்று கேட்டருள, அவர்கள் "உம்முடைய வாக்கால் சம்புகேசுரச் சிவபெருமானாகிய எங்கள் தெய்வத்தின்மீது ஒருபாடல் பாடித்தருவீரேல் விசுவரூபதரிசனப் பசுவை நாங்கள் விடுவதற்கு யாதோராடங்கமுமில்லை" என்று சொல்லினர். "பொய்ம்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த - நன்மை பயக்கு மெனின்" என்கிற குறளின்படி அவர்கள் சொன்னதற்கு இணங்கினவரைப்போலநடித்து, ஐயங்கார் "நம்பெருமாளுக்குவிசுவரூப தரிசனத்திற்கு மற்றுநாள் பிராதக்காலத்தில் ஆடங்கமாகிறபடியால் அப்பசுவை விடுவீர்களாகில் உடனே யாம்பாடுகிறோம்" என, "எங்கள சிவபெருமான்விஷயமாக நீர்பாடுவதுயதார்த்தமாயின் அப்பாட்டில் இரண்டொருசீரையேனும் முன்னேசொல்லுவீரேல் பசுவைவிடுகிறோம்" என்று அவர்கள சொல்ல, ஐயங்கார் புன்னகைகொண்டு அவ்வாறே "மங்கைபாகன்" என்று முதலிரண்டு சீரை அருளிச்செய்த மாத்திரத்தில் அப்பசுவை விட்டனர்கள். உடனே ஐயங்காரும் முன்தாம்சொன்ன சீரைத்தொடங்கி,

பதினறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

"மங்கைபாகன்சடையில்வைத்தகங்கையார்பதத்துநீர்
வனசமேவுமுனிவனுக்கு மைந்தனைதில்லையோ
செங்கையாலிரந்தவன்கபாலமாரகற்றினர்
செய்யதாளின்மலரான்சிரத்திலானதில்லையோ

வெங்கண்வேழமூலமென்னவந்ததுங்கள்தேவனோ
வீறவானனமரிலன்று விறலழிந்ததில்லையோ
அங்கணுாலமுண்டபோதுவெள்ளிவெற்பகன்றதோ
ஆதலாலரங்கனன்றிவேறுதெய்வமில்லையே"

"ஆதலால் ஜீவகோடியில் உங்கள்தேவதை சார்ந்தவரே யொழியப்பரமார்த்தமா அல்லர்" என்று இச்செய்யுளைச் சொல்லி "உலகத்துக்குப்பலதெய்வங்களுண்டோ? ஒருதெய்வமேயாம்; அந்தத்தெய்வம் திருவரங்கனே யல்லாமல் வேறில்லை" யென, அதுகேட்டு அவ்வாகமவாதியர், "கிணறுவெட்டப்பூதம் புறப்பட்டாற்போல, இஃதென்னவிபரீதமாய்முடிந்ததே" யென்று சினங்கொள்ள, அந்த ஆகமவாதிகளுக்குள் சிறந்தநிஷ்டாநுபவர்களாகிய சிலவித்துவான்கள் வேதவிருத்தமாகிய ஆகம புராணங்களைக்கொண்டு புலவர் பெருமானாகிய ஐயங்காரோடு வாதுசெய்யத்தொடங்கினர்.

அவ்வாதிசைவவித்வான்கள் கேட்ட வினாவுக்குச் சொல்லியருளிய உத்தரங்களைப் பின்னுள்ளோரும் தெரிந்து கொள்ளும்படி பரமகாருணிகரான ஐயங்கார் வெள்ளைப்பாவாற் கூறினர். அவைவருமாறு :

(க) எங்கள் சிவபெருமான் அக்கினிமலையாய் நின்றருளிய போது அவருடைய பாதத்தைத் திருமால் தேடினனென்றதற்கு விடை:

நேரிசை வெண்பா.

அண்ட மளக்க வடிக்கீ ழொடுங்கியுல
குண்ட பொழுதரத் துள்ளொடுங்கித்—துண்டமதி
சூடினன் மாலருளாற் றோன்றினா னங்கவனைத்
தேடினன் மாலென்ப தென்.

(உ) லோகேசுவரராகிய பரமசிவனார் திரிபுரதகனஞ்செய்து அச்சுதன்முதலிய தேவர்களைக் காத்தருளினரென்றும் அந்த அச்சுதனவர் விருஷபமாய் அப்பரமசிவத்தைத் தாங்கினரென்றும் சொன்னதற்கு விடை:

ஆவா யதன்கன்று யந்தரியா மிப்பொருளாய்
ஏவாய்ப் பவுத்தனுமா யெம்பெருமான்-காவாக்கால்
போரும் பொருமோ புராந்தகனென் றேபேரும்
சீரும் பெறுமோ சிவன்.

அந்த வரனே யனுமானா கப்பிறந்து
சந்ததமும் வாகனமாய்த் தாங்கியதை-யிந்தவுல

கெல்லா மறியமா லேறுனு னென்பதென்னோ
கல்லா மடமாந்தர் காள்.

(௩) பக்தவத்ஸலராகிய திருமால் சிவனைக் காத்தருளினனெ ன்பதற்கு மேலும் ஓரெடுத்துக்காட்டுவிடை :

தூளாய்த் தலைசிதறிச் சுட்டவிடம் புன்முளைத்து
வாளாப் பெயரு மறையாதோ - தாள்வருந்த
வந்தசிவ னுக்கிரங்கி மாயவிரு தாசுரனை
அந்தவரி கொல்லாவிட் டால்.

(௪) ஸ்ரீகைலாஸபதியை ஸ்ரீபரந்தாமனவன் தன்னுடைய கண்ணைச்சாத்திச் சக்கரத்தைப் பெற்றனென்று நூல்கள் கூறுகி ன்றன வென்றதற்கு விடை:

சக்கரத்தை மிக்கமலர் சாத்தியுபா சித்ததனல்
முக்கவட்டுச் சூல முனம்பெற்றான் - நக்கனென்று
மாமறைநூல் சொல்லவரன் மாற்கஃதீந் தானெனவென்
தாமதநூற் பொய்யறியா தார்.

சின்முத் திரைதரித்துத் தெக்கணா மூர்த்தியென
இன்ன மரன்றியா னித்திரிக்க - முன்னமரி
போதோர்கண் ணுலரனைப் பூசித்தா னென்றுரைப்ப
தேதோ சிவப்பிராந்த ரே.

(௫) சிவனார் விஷபானஞ் செய்து திருமால் முதலிய தே வர்களைக் காத்தாரென்றதற்கு விடை:

அண்டமுண்ட போதுகட லாலமுமா லத்தையுண்ட
கண்டனையுங் கூடவுண்ட காரணனை - மண்டுநெஞ்சக்
கஞ்சினதா கப்பகர்வீ ரசுமத்தை நம்பிநம்பி
வஞ்சநர கில்விழுவீர் மாண்டு.

மலைமடந்தை தன்கழுத்தின் மங்கலநா ணேதோ
அலைகடைந்த நாளுதித்த வாலம் - கலைகடைந்த
நக்கனும் பாத்திரத்தால் நாரணனு ருள்ளமுகந்
தக்கணத்துண் ணுவிடினு வா.

(௬) சதாசிவனனவர் சரபமாய்வந்து நரசிங்கமூர்த்தியைப் பொருதுவென்றா ரென்றதற்கு விடை:

புக்க கருடனையோர் புன்மசகம் வென்றதிறம்
ஒக்குங்கனக னுரங்கீண்ட - மிக்கதிறல்

ஆளரியைப் பொன்னனுக்கா வஞ்சிக் கிடந்தசிவன்
கோளரியைத் தா னென்னுங் குறி.

பொன்னனுரங் கீண்டதனாற் பொங்குசின மாறிற்றே
தன்னு சிவசரபஞ் சோரவுயிர்-அன்னதனைப்
பற்றி வகிர்ந்தபின்னர்ப் பாழி நரமடங்கல்
உற்ற சினந்தணிந்த தூங்கு.

(எ) சுதரிசனாழ்வாரால் சிவன் தலையிழந்தானென்று மேலு மோரெடுத்துக்காட்டிவிடை:

இந்திரன்செய் வேள்விக் கிடரிழைக்க வெண்ணுமரன்
ஐந்தலையு மற்றுவிழ வாழியினால்-முந்தரிந்த
அச்சுதனை மைந்தரொடு மம்பிகையாள் வேண்டிடலும்
அச்சிவன்பெற் றானுயிரை யன்று.

(அ) காசியில் எழுந்தருளியிருக்கும் மஹேசுவரனார் அந்த ஸ்தலத்தில் மரிக்கின்றவர்களுக்கு முத்தியைக்கொடுக்கின்றா ரென்றதற்கு விடை:

கேட்டுமறி யீர்கொல் கிளர்சடையோன் வண்காசி
நாட்டிறப்போர் தம்முயிரை நற்கதியிற்-கூட்டல்
தயரதகு மாரன் தனிப்பெயரன் னோர்க்கு
வயமுறப்போ தித்தன்றோ வாய்ந்து.

(௯) சிவனை மஹேசுவரனென்றதற்கு விடை:

செய்தவங்கள் செய்து சிவனாயி னானைநீர்
எய்த மஹேச்சுர னென்றேத்தல்-வைதசிறு
புன்கள்ளி தன்னைப் புவியின் மகாவிருக்கம்
என்கையொக்கு மொக்குமே யீங்கு.

(௧௦) தவங்கள் செய்து சிவனாயினானென்று நீர் கூறுதல் எவ்வாறென்றதற்கு விடை:

ஒருகத்தி னூருவினி லொருகத்திற் பூருவிலம்
பொருகத்தன் பார்ப்பிறந்த போழ்ததனில் - கார்சிறந்த
கண்டத்தான் ரோதனஞ்செய் காரணத்தால் ருத்திரனென்
றெண்டவ நூல்களுரைக் கும்.

(௧௧) ஸ்ரீ கண்டத்தானன்றோ வேதமுதல்வ னென்றதற்கு விடை:

ஞான மறையை நவின்றுரைக்கும் போதெல்லாம்
[illegible] முறை யானாதி யந்தத்தும்-ஊனமற
அந்தணர்க ளென்போ ரரியோ மெனுஞ்சொல்லைத்
தந்துரைத்தல் கேட்டிலிரோ தான்.

(கஉ) சைவர்கள் ஆராதிக்குந் தெய்வம் யோனியும் இலிங்கமும் என்றுகூற அதுபொறுதவர்களாய்த் திருமாலை நித்திப்பதே பொருளாகக்கொண்டு, ஆலயங்களில் பிரதிஷ்டை செய்திருக்கும் சிவலிங்கமூர்த்தியை யோனிரூபமாய்த் தாங்கியிருப்பவர் திருமாலன்றோவென்று சொன்னதற்குவிடை :

பிருகுகோத மன்முன் பெருஞ்சினங்கொண் டின்பம்
பருகுமையீ சன்குறிகள் பாரில்-அருகிவிழ
இட்டசா பத்தின லிற்றகுறி யன்றோநும்
இட்டதெய்வ மாயிருந்த லிங்கு.

(கங) ஸ்ரீஸர்வேசுவரனை யாய்மதங்கொண்டு பேசுமவர்கள் அடையும்பயன் இன்னதென்று குறிப்பித்துக் கூறும் மேலுமோர் விடை :

கையிருக்கக் காலிருக்கக் கண்ணிருக்க நக்கனுக்கு
மெய்யிருக்க வன்பா விரும்பாதே-வைதுவிழும்
ஆண்குறியைப் பூசித் தழிவதெல்லா மாயவனை
வீண்குறியாப் பேசும் வினை.

(கச) அவ்வாறானல் சிவனையாராதித்துப் பூதி உருத்திராக்ஷ இலிங்கம் இவற்றைச் சிலபிராமண ஜனங்கள் தரிக்கின்றார்களே என்றதற்கு விடை:

வேதியர்க ளாய்ப்பிறந்தும் மெய்யிலிலிங் கம்பொறுத்துப்
பூதியான் கண்மணியின் பூணணிந்த-பாதகரை
நீதியா சன்றனிலத்தின் புறம்விடுக்க
ஓதுமே நுல்க ளொருங்கு.

(கரு) திருமாலுக்கு ஆராதித்த நிவேதனங்களை யார்கொண்டாலும் தோஷமில்லை, சிவபெருமானுடைய நின்மாலியத்தைப் பிராமணர்களும் கொள்ளக்கூடாதென்பது அந்நின்மாலியப் பரிசுத்தத்தின் ஏற்றத்தைக் கண்டன்றோ வென்றதற்குவிடை:

சத்திரயா கந்தன்னிற் றக்கன் பிருகரற்கு
வைத்தகொடுஞ் சாபத்தான் மாமறையோர்-இத்தலத்தில்
சங்கானின் மாலியமுந் தானுகந்த போனகமும்
அங்கி கரியா ரறிந்து.

(கசு) நீர் இவ்வாறு சொல்லுவீரானல் உலகத்திலே சைவஸமயத்தைப்பற்றிய ஆகமமுதலிய நூல்களை விரித்துத் திருவாய் மலர்ந்தருளினவர் பரமசிவக்கடவுளன்றோ? அவருடைய திருவாக்குப் பிரமாணமன்றோ? என்றதற்கு விடை:

மோகனூற் பல்சமய முன்னியற்றுந் தீயவினை
போகநறு நாவலின்கீழ்ப் போந்துமையாள்-பாகனன்னீர்
பம்புசீர ரங்கற் பணிந்துதவஞ் செய்ததன்றோ
சம்புகேசு ரப்பேர்த் தலம்.

(கஎ) சிவபெருமானைக்குறித்து அநேகர்தவஞ்செய்து வரங்களைப்பெற்றனரென்றதற்குவிடை:

பொன்னிலங்கு மெய்யன் பொருவலிசேர் வாலியொடு
தென்னிலங்கைக் கோமான் றிறல்வாணன் - முன்னரனைத்
தாழ்ந்து பெறுவரத்தைச் சாற்றிடலும் வேண்டுமோ
வாழ்ந்துவிடிந் திட்டனரே வாய்ந்து.

(கஅ) திருமாலேபரனென்னக் கங்கைக்கரையில் வேதவியாஸமுனிவர் பொய்சொன்னபடியால் கைதம்பித்ததென்றதற்கு விடை:

யாரு மறிய வெசுருவே தாரணமெய்
ஆருமொழி யாளனென வாய்ந்துரைக்க-வோர்வின்றி
வேதவியா சன்பொய் விளம்பக் கரந்தம்பித்
தேதமுறு நின்றதென்ப தென்.

முனிவ ரெழுவர் முதுபராச ரன்செம்
பணிமலரா னுள்ளிட்ட பல்லோர்-இனிதாய்த்
திருமால் பரனென்னச் செப்பினரன் றோர்க்கேன்
பெருநாத்தம் பிக்காத பெட்பு.

(ககூ) கேசவனேபரனென்றவேதவியாஸர்மேற் சினங்கொண்டெழுந்த நந்திகேசுவரர் வரலாறு கூறியவிடை:

ஓதுமுனி மால்பரனென் றோதமாழ் கிச்சினந்து
போதுநந்தி மாமுகத்திற் பொன்னடியால்-வாதசேய்
முன்னுதைத்தா னந்த முறைமையாற் கங்கைபெருத்
தின்முகத்தன் றேன்பிறங்க லீங்கு.

* மாருதிசேர் பாதமுகம் வாய்க்கப் பெறுநந்தி
சீருதவு மால்பரனுச் சிந்தைசெய்யுங்-காரணத்தால்
போர்கங்கை மாட்டைப் பெருமாள்மா டென்னவுல
கோருரைப்பர் சோரா துணர்ந்து.

---

* அநுமானுடைய திருவடி ஸ்பர்சத்தால் நந்திகேசுரனுக்கு ஞானமுண்டாகிச் சோழதேசஞ்சென்று அச்சுதனைநோக்கித் தவஞ்செய்து பேறுபெற்றகாரணத்தால் அந்தத்திவ்யதேசத்துக்குத் திருநந்திபுரவிண்ணகரமெனப்பெயர் வழங்கிவருகின்றது.

(உ0) திருமால் உலகத்தில் அனேக அவதாரங்கள் செய்தமையால் அவர் நம்மைபோலப் பலபிறப்புடையவரன்றோ வென்றதற்குவிடை:

பிறப்பிலியாய்த் தானிருந்து பேருலகின் மாயோன்
உறப்பிறக்கு மென்றுமறை யோத-மறுத்துநீர்
அச்சுதனைச் சாதமுடை யானென் றறிவிழந்த
பிச்சரிற்பி தற்றுவதென் பேச்சு.

(உக) அவ்வவதாரம் இதுகருதியென்னும் விடை:

ஆய வறத்தை யறவோரை யாக்கவும்வெந்
தீயர்தமைப் போக்கவுமே திண்புவியில்-மாயுகங்கள்
தோறுமுற்ப விப்பனெனத் தொல்கீதை யிற்கண்ணன்
கூறுமொழி தேர்கிலிரோ கூர்ந்து.

(உஉ) பிரமன் சிவன் முதலானோர் இறைவணங்கிய திருமாலைப் போல அவதரிக்கநிமித்தமில்லை யென்னும்விடை:

உடையானுக் கன்றி யுடைப்பொருளைக் காக்கப்
படையார் தமக்குண்டோ பாரம்-அடைவாகச்
சீதரனார் காக்கத் திருவவதா ரஞ்செய்வர்
சேதனருக் கேனச் செயல்.

(உங)சிவனுக்குப்பிறப்பில்லை யெனமயங்கிக்கூறியதற்குவிடை

விச்சுவவ ரன்சுகனு மேலோன் சமதங்கி
அச்சுவத்தா மன்னனுமா னவ்வுருவன்-மெச்சுபுகழ்
பொங்குதுரு வாசன் பொலிசை கிடவியனார்
சங்கரன்பி றப்பன்றோ தாம்.

(உச) சிவனுடைய பிறப்புக்கள் இந்திரன்முதலானோர்செய்த பிறப்புக்களைப்போலன்றிச்சிறந்தனவல்லவென்னும்விடை:

அங்கி யமன்வாயு வாகண் டலன்முதலோர்
இங்குதித்த தோற்றங்கள் யாவையுமே-பொங்கறிவின்
மிக்கவர்கண் மான விளம்பினரோ வில்லையஃ
தொக்கு மரன்பிறப்புக் கும்.

---

ஆதிசைவசமய நிஷ்டாநுபவர்களாகிய வித்துவான்கள் சொல்லிக்கொண்டு வந்தபிரச்னைகளுக்கு வடமொழியினுந் தென்மொழியினும் தெய்வப்புலமையுள்ள வீரவைஷ்ணவ சிகாமணியாகிய ஐயங்கார் அருளிச்செய்த விடைகளை மறுத்துச் சொல்ல ஒன்றுந் தோன்றாமல் ஓமென்று ஒப்புக்கொண்டு தங்கள் தங்கள் இருப்பிடத்துக்குச் சென்றனர்.

---

## ஐயங்கார் அருளிச்செய்த தனிப்பாடல்கள்.

### தாழிசை.

செங்கண்மால்கழன்மஞ்சனம்விழுந்தொட்டி சங்கரன்றலைகளே
சீர்கொள்கண்ணனல்லடிநின்மாலியக்குப்பைசம்புவின்றலைகளே
எங்கண்மாயவன் பாயறாக்கிய தூக்குமாபதி செவிகளே
ஏந்தெழிற்புருடோத்தமன்றுதியெழுதுமேடாருக்களே
பொங்குசீதரனெச்சிலார்படிக்கம்புராரியின்கண்டமே
புகலிராமனதடிகொள்பாதுகைபகலுமுக்கணன்காமதே
திங்கள்சூழ்சித்ரகூடமேவியவெங்கள்கோவிந்தராசற்குத்
தினமுமேகூத்தாடியானவன்றிருச்சிற்றம்பலவாணனே.

### கட்டளைக்கலித்துறை.

கானேந்துதாமரைவாவியுளானைகராவினயர்ந்
தானேந்திமூலமென் றோதியநாட்சென்றுதவுகையால்
தேனேந்து சோலையரங்கனல்லாற்றெய்வமில்லையென்றே
மானேந்துகையன்மழுவேந்திஞானிந்தமாநிலத்தே.

மத்தக்கரியைக்கராப்பற்றிநின்றதொர்வாவியுள்ளே
சித்தந்தெளிந்துமுறையிடும்போது செழுந்துளவக்
கொத்துக்கிளர்முடிக்கோவிந்தவென்றதுகூப்பிட்டதோ
செத்துக்கிடந்தனவோகெடுவீருங்கள்தெய்வங்களே.

### திருத்தேர்விஷயமாயருளிச்செய்த நேரிசைவெண்பா.

ஒன்று மறியாத வூமைகா டென்னரங்கர்
இன்று திருத்தேரி லேறினர்-நின்று
வடம்பிடிக்க வாருங்கோள் வைகுந்த நாட்டில்
இடம்பிடிக்க வேண்டுமென்றக் கால்.



☞ இந்நூற்செய்யுட்கள் இன்னும்பலவுள வென்பர். அச்செய்யுட்களை யாரேனும் கொடுப்பராயின் பரமோபகாரமாகக் கொண்டு வெளிப்படுத்தப்படும்.

அழகியமணவாளதாஸர் திருவடிகளேசரணம்.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## நூன்முகம்.

தூது என்பது தமிழின்கண் வகைப்பட்டுள்ள பிரபந்தம் தொண்ணூற்றாறனுள் * ஒன்றாம். "இயம்புகின்ற காலத் தெகினமயில் கிள்ளை - பயம் பெறுமே கம்பூவை பாங்கி - நயந்தகுயில் - பேதைநெஞ்சந் தென்றல் பிரமரமீ ரைந்துமே - தூதுசென்று வாங்குந் தொடை" என்று கூறியவாறு தூதுசெல்லற்குரிய பொருள்களுள் மேகமும் ஒன்றாதலின் இந்நூல் அம்மேகத்தின் பெயரா னெழுந்ததென்றறிக. திருமங்கைமன்னன் பல திருப்பதிகளின் எம்பெருமான்களிடத்தும் ஈடுபாடுடையரேனும், இவர் மிகுதியும் ஈடுபட்டது திருக்கண்ணபுரம் சௌரிப்பெருமான் பக்கலிலும் திருநறையூர் நம்பியிடத்துமென்ப. அவ்விருவர்தம்முளும் இவர் காலாழ நெஞ்சழியக் கண்சுழல மாலேறியது நம்பிபக்கலிலேயாம். அதுபற்றியே, "அன்னநடையா ரலரேச வாடவர்மேல் - மன்னு மடலூரார்" எனவும், "கடலன்ன காமத்த ராயினு மாதர் - மடலூரார் மற்றையார் மேல்" எனவுங் கூறப்பட்ட வரம்பினையுங் கடந்து இவர் தலைவிநிலையில் மடலூர்தலாகிய புதுத்துறையி னிழிந்ததூஉம் 'இம்மதிளை யங்குக்கட்டி அம்மடலை யிங்குப்பாடவைத்தாரோ' என அழகிய மணவாளனும் மால் கொள்ளும்வண்ணம் சிறுமடல் பெருமடலாகிய இருமடல்களையும் நம்பியின் மீதே பாடியதூஉம் என்க. திவ்யகவிப் பிள்ளைப்பெருமாளையங்கார் தாம் ஆழ்வார்கள் படியை அடியொற்றிப் பிரபந்தங்கள் பாடினாராதலின், திருமங்கையாழ்வார் ஈடுபட்ட நம்பியின் ஸ்வரூப ரூபவிபூதிகளில் தாமும் ஈடுபாடுடையராய்த் தலைவியின்னிலையை அடைந்து தூது விடுபவர், "மேகங்களோ வுரையீர்" என நம்மாழ்வாரும், "மின்னாகத் தெழுகின்ற மேகங்காள் வேங்கடத்துத் - தன்னாகத் திருமங்கை தங்கிய சீர் மார்வர்க்கு - என்னாகத் திளங்கொங்கை விரும்பித்தாம் நாடோறும் - பொன்னாகம் புல்குதற்கென் புரிவுடைமை செப்புமினே" என ஆண்டாளும் மேகத்தைத் தூது விட்டமைபோலத் தாமும் அம்மேகத்தையே தூதாகவேண்டி விடுகின்றார். எனவே, இந்நூல் மேகவிடுதூதாயிற்று. மேகஸந்தேசம் இயற்றினார் வடமொழிக்கண்ணுமுளார் †.

இனி, ஐயங்காரது கவியின் சொல்லழகும், பொருளழகும், தொடையழகும், நடையழகும், ஓசையின்பமும் முதலிய பொலிவுகள் எத்தகையோருக்கும் அப்பொழுதைக் கப்பொழுது ஆராவமுதமாய்த் தேனூறி யெப்பொழுதுந் தித்திக்குமென்பது பலருமறிந்ததேயாம். இந்நூலினுள் திருநறையூர்த் தலவிசேடமும் நம்பிநாய்ச்சியார் அவதாரவிசேடமும் சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறப்படுதலோடு பல ஸம்ப்ரதாய நுட்பங்களும் அறியக்கிடத்த லுணர்க. பல கூறலென்? தமிழின் சுவை நுகரும் விருப்பினர்க்கு இந்நூல் அமுதம் நிறைந்தவொரு பொற்கலமும், ஆத்ம சாஸ்திரார்த்தம் ஆராயும் அதிகாரிகட்கு ஓரருஞ்சுடர் விளக்கமுமாம் என்க.

ஐயங்கார் தொண்ணூற்றாறு பிரபந்தமும் செய்தருளினர் என்ப. இஃதுண்மையாயின் அவர் அருளிச்செய்த பிறநூல்கள் பலவும் இறந்தொழிந்தனபோலும். இந்நூலிற்குக் குறிப்புரை யொன்றெழுதிச்சேர்க்க விரும்பினேனாயினும் அவகாசமின்மையால் அது செய்யாது விடப்பட்டது. இனிக் காலம் வாய்ப்புழி அதனோடு இந்நூலை வெளியிட நினைத்துளேன்.

இங்ஙனம்,

கா. ஸ்ரீ. கோபாலாசாரியன்.

---

* பிரபந்தம் 96-என்பதன் விவரம் அகராதி முதலியவற்றிற் காண்க.

† காளிதாஸ மகாகவி.

ஸ்ரீ







# தனியன்.

## நேரிசைவெண்பா.

போதுமண வாளணங்கு புல்லுநறை யூர்நம்பி
மீதுமண வாளரருண் மேகவிடு—தூதனைச்
சொல்லுவார் கேட்பார் துதிப்பாரிம் மேதினிமேல்
வெல்லுவா ரெல்லாம் விரைந்து.



## காப்பு.

### நம்மாழ்வார்.

நாரணனை யெவ்வுயிர்க்கு நாயகனை யண்டாண்ட
பூரணனை நாகணையிற் புண்ணியனை—வாரணமுன்
வந்தானை யேத்தி மறையா யிரந்தமிழாற்
றந்தானை நெஞ்சே தரி.

### திருமங்கையாழ்வார்.

நாட்டியசீர்த் தென்னறையூர் நம்பி திருவடிக்கே
சூட்டியதோர் மேகவிடு தூதுகருக்—கூட்டம்
பொலியன்ப ரேத்தும் புனலாலி நாடன்
கலியன் பரகாலன் காப்பு.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# திருநறையூர்நம்பி

# மேகவிடுதூது.

---

கலிவெண்பா.

## மேகத்தை விளித்தல்.

1 சீர்கொண்ட செங்கமலச் செல்வத் திருமகளு
நீர்கொண்ட வேலை நிலமகளு—மேர்கொண்ட

2 காந்தண் மணிக்கடகக் கையா லடிவருடப்
பாந்தண் மணிச்சுடிகைப் பாயன்மேற்-சேர்ந்துறங்குஞ்

3 செங்கண்மா லுந்தித் திருத்தா மரைப்பிறந்த
வங்கண்மா ஞாலத் தனைத்துயிர்க்குந்—தங்காமும்

4 மாரி வழங்குதன் மாறுமே கைம்மாறு
காரிய மென்று கருதாமே—பாரிற்

5 றுளிக்கின்ற தண்ணந் துளியமுத நல்கி
யளிக்கின்ற கொண்மூ வரசே—களிக்கின்ற

6 மேலுலக மேறி விரிஞ்சனு மம்படைத்து
நாலு திசைமுகமு நண்ணுதலான்—மாலுமாய்

7 நீலநிற மாகி நிறைகமலக் கண்ணுகிக்
கோல வளையாழி கொள்கையாற்—சூலம்

8 விரவிய பாணியாய் மின்னையிடத் தாங்கி
யரவ மணியு மழகால்—வரமளிக்கு

9 மெத்தே வருக்கு மிறைவராய் மேலாய்
முத்தே வருநிகரா மூர்த்தியே—மைந்தகன்ற

10 வானத்து ளேபிறந்து வானத்து ளேதவழ்ந்து
வானத்து ளேவளரும் வானமே—வானத்து

11 வேலைவாய் நீரருந்தி வெற்பி லரசிருந்து
சோலைவாய்க் கண்படுக்குந் தோன்றலே—ஞாலமிசைத்

## மேகத்தின் சிறப்புரைத்தல்

12 தானமு மெய்யுந் தருமமுங் கல்வியு
மானமுந் தானமு மாதவமு—நாணக்

13 கருங்கொண்டை மங்கையர்தங் கற்புநிலைநிற்ப
தருங்கொண்ட லேயுனைக்கொண் டன்றோ—நெருங்குமுய

14 ராழிநீர் துய்ய வமுதநீ ரானதுவும்
வாழிநீ யுண்ட வளமன்றோ—தாழுமடி

தன்றுயர்கூறி மேகத்தை வேண்டுதல்.

15 யாவுஞ்சிந் தாமணியு மம்புயமுஞ் சங்கமுங்
காவும் பணியவுயர் கார்வேந்தே—நாவினாற்

16 சாதகமுந் தோகைத் தனிமயிலும் போலவே
மேதகைய நின்வரவை வேட்டிருந்தேன்—பூதலத்துப்

17 பல்லுயிருங் காக்கப் பரமா முனக்கெனது
புல்லுயிருங் காக்கிற் புகழன்றோ—வல்லதொரு

18 சீருயிரு மேகமே செங்கண்மாற் காளானே
னாருயிரு மேகமே யல்லவோ—பேராவ

19 நீலமஞ்சே கேட்டியா னின்னையல்லா தென்னையிந்தக்
காலமஞ்சே லென்பாரைக் காண்கிலே—னோலமரு

20 விண்மாரி யேபெருமான் வேரித் துழாய்வேட்டுக்
கண்மாரி பெய்வதெல்லாங் கண்டாயே—தண்மை

21 விளையும் பயோதரமே வெம்பாத செம்பொ
னளையும் பயோதரமே யானேன்—கிளைபிரியாக்

22 கோல மழையே குயின்மா ரனையந்திக்
கால மழையாமே காப்பாரார்—நீலநிற

23 மங்குலுக்கு வேந்தே மலர்க்கணை புதைத்தனைய
கங்குலுக்கு நெஞ்சங் கரைகின்றே—னிங்கு

24 நடந்தகன மேமுலையி னாலுந் தரள
வடந்தகன மேசெய்து மாய்த்தேன்—விடந்திரண்ட

25 திங்க ளொழிலிக்குச் சிலைமார வேண்முனியி
லெங்களொழி லிக்கரசே யென்செய்வேன்—மங்கலமா

26 மிந்திரவில் வாங்கி யெழுகின்ற மைப்புயலே
வந்திரவில் வாடை வருத்துங்கா—ணந்தரத்து

27 விண்ணே யுனக்கிவற்றை விண்டுரைத்தே னல்லாதெ
னுண்ணேய வேட்கையெவர்க் கோதுவேன்—கண்ணழலால்

வேட்கைபிறர்க் குரையேனென்றல்.

28 வெந்தா னிலத்துக்கும் வீறுகத் தாங்குகையான்
மந்தா னிலத்துக்கு வாய்திறவே—னந்தக்

29 குருத்தத்தை மாரன் குரகதமா மென்றே
வருத்தத்தை யங்குரைக்க மாட்டேன்—கருத்துற்ற

30 மாதண் டலைவாய் மதுகரத்துக் கும்மவன்றன்
கோதண்ட நாணென்று கூறேனுன்—மூதண்ட

31 கோளக் குயிற்கெல்லாங் கோவே யவன்றனது
காளக் குயிற்குங் கழறேனு—னொளொன்றி

32 லன்புரு தேயன் றாசனுட லீர்வித்த
புன்புரு வுக்கும் புகன்றிடேன்—மென்புறத்துக்

33 கோம்பிக் குடல்பணிக்குஞ் கொச்சைமட மஞ்ஞைக்குஞ்
சோம்பித் தளருந் துயர்பணியேன்—றேம்பிரச

34 நிற்கின்ற பூவைக்கு நீள்குழலார் சொல்லியதே
கற்கின்ற பூவைக்குங் கட்டுரையேன்—பொற்கால்

35 வெறிப்பதும வீட்டன்னம் வெண்பாலு நீரும்
பிறிப்பதுபோ னட்புப் பிறிக்குங்—குறிப்பறிந்து

36 காதலா லுள்ளக் கவலை யதுகேட்க
வோதலா காதென் றுரையாடே—னாதலா

37 லுள்ளே புழுங்குவ தன்றி யொருவர்க்கும்
விள்ளே னுனக்கு விளம்பினேன்—றெள்ளியநூ

### இரக்கந் தோன்றவுரைத்துத் தூதுவேண்டல்.

38 லோதுவா ரெல்லா முதவுவார்க் கொப்புரைக்க
வேதுவாய் நின்ற வெழிலியே—பூதலத்துப்

39 பெய்யுதவி யும்புரிந்தாற் பேச்சுதவி யுஞ்சிறிது
மெய்யுதவி யும்புரிய வேண்டாவோ—துய்ய

40 வடலாழி யானடிக்கே யன்பாகிக் காதற்
கடலாழி மூழ்கினேன் கண்டா—யுடல்வாடி

41 விம்முகிலே சந்தாக மீளத் திருமால்பான்
மைம்முகிலே சந்தாக மாட்டாயோ—பெய்ம்மதவேள்

42 தண்ணப்புஞ் செய்வதெல்லாந் தாமோ தரனடிக்கீழ்
விண்ணப்பஞ் செய்தருள வேண்டாவோ—வெண்ணத்தின்

43 சீதரனை நீயிரந்து தெய்வத் துழாய்கொணர்ந்தெ
னாதரவு தீர்த்தருள லாகாதோ—கேதகைக்கு

44 மின்கேள்வ னுக்கியநீ விண்ணோர் பெருமானை
யென்கேள்வ னுக்கினு லேலாதோ—முன்கேட்டு

45 மெள்ளரிய தாம மெனக்குதவா யேலுனக்கு
வள்ளலெனு நாமம் வழுவாதோ—தெள்ளுகடல்

46 ஞாலத் துளவமே நல்விளமை போகாமற்
கோலத் துளவமே கொண்டுதவாய்—சீலத்தா

47 ஊனு முடலா யுறுதுணையாய்த் தெய்வமா
யானு மருந்தாயென் னாருயிரா—யானாத

48 நெஞ்சமாய்க் கண்ணாய் நினைவாய் வினையேற்குத்
தஞ்சமாய் நின்ற தனிமுதலே—பஞ்சவர்க்காய்

49 மெய்த்தூது சென்றவரை வெல்லவே வெண்சங்கம்
வைத்தூது செங்கமல மாயோன்பா—லித்தூது

50 நல்லதெனக் காரே நடந்தருள் வேண்டுநீ
யல்லதெனக் காரே யருள்செய்வார்—சொல்லித்

51 தருதுமெனக் கந்தரமே சாற்றாயே லுய்யக்
கருதுமெனக் கந்தரமே கண்டாய்—பெரிது

தூதுசென்றார்சிலரைஎடுத்துக்காட்டல்.

52 மௌனத்தோன்றி யோதுயர மெய்தினார் பார்மே
லூனத்தோன்றி யோதா துழன்றார்—நினைத்தோர்

53 தமது பிறப்பறுக்குந் தாயாகி மேனா
ளமுதிற் பிறந்தாள்பா லன்றோ—நமது

54 கருமஞ் சனையவற்காய்க் காய்கதிரைப் பாய்ந்து
பொருமஞ் சனைசிறுவன் போனான்—றரணிதனின்

55 மீது பரவை விடமுண் டவனன்றோ
மாது பரவை மனைவந்தா—னாதலா

56 லோது மிவரி லுயர்ந்தோ ரிலையென்றே
தூதுபுரிந் தோரைத் தொகுத்துரைத்தே—னாதலாற்

57 றேனின் புறத்தூதுந் தெய்வத் துளவினால்
யானின் புறத்தூ தெழுந்தருளாய்—வானிற்

58 றிவலை பிலிற்றிவருந் தெய்வமே நீயென்
கவலையறத் தூதுபோங் காலை—குவலயத்தி

பாற்கடலிற் பரமன்பெருமையும் நிலைமையும்.

59 லெம்பிரா னாரு மவர்பெரு மெற்பயின்ற
தம்பிரான் செய்தமையுஞ் சாற்றக்கே—ளும்பரிற்

60 பன்னிருவர் மான்றேர்ப் பரிதிக் கடவுளரு
மன்னிருவர் தெய்வ மருத்துவரு—மொன்னலரைப்

61 பாயும் விடையர் பதினொருவ ருந்திசையிற்
காயுங் கடாயானைக் காவலரு—மாயகதிர்

62 வெண்ணிலா விட்டு விளங்குங் கலாமதியு
மெண்ணிலாத் தாரகையி னீட்டமுங்—கண்ணி

63 லருட்டரு ஞானத் தருந்தவர் நாகர்
தெருட்டரு விஞ்சையர் சித்தர்—கருட

64 ரரக்க ரியக்க ரவுணர் முதலோர்
பரக்குங் கணங்கள் பலரும்—பெருக்கரு

65 நீரேழு மேழு நினது பெருங்கணமும்
பாரேழு மேழு பருப்பதமு—மீரே

66 ழடுக்கும் புவனமு மாடகமால் வெற்பு
மெடுக்கு மரவரசு மெல்லாந்—தொடுக்கத்தான்

67 முண்டக நாபி முளைக்குஞ் சதுமுகனே
டண்ட வளாக மடங்கலுங்கண்—கண்டளித்து

68 முன்னிய வண்ண முடித்து விளையாடுந்
தன்னிகரில் லாத தனிமுதல்வ—னன்னமாய்

69 மீனாகி யாமையாய் வெள்ளேன மாய்மடங்கன்
மானாகி மாயையால் வாமனமா—யானாத

70 மானிடராய்ப் பாய்பரியாய் வாழு மடியவர்க்குத்
தானிடராற் றப்புகுந்த தம்பிரான்—மேனாளிற்

71 பைந்நாகப் பள்ளிமேற் பங்கயங்கள் பூத்ததொரு
மைந்நாகம் போற்கண் வளருநாட்—பொன்னைய

72 வன்ன முளரி மலர்த்தவிசில் வீற்றிருக்கு
மன்ன முணர்த்தவுண ராமையா—லென்னையல்லா

73 லிந்தித் திரைமடந்தை யெய்தலுமா யிற்றோவென்
றுன்னித் திரைமடந்தை யூடினளா—யந்நிலையே

திருமகள்சுகந்தவனம்வருதல்.

74 காயத் திரியுங் கலைமகள்சா வித்திரியு
மாயத் தெரிவையரா யாங்குவர—நேயத்தார்

75 கோலத்தாள் கைதொழுது கூறிலேவேன் முக்கவட்டுக்
சூலத்தா ளேவற் றொழில்கேட்ப—ஞாலத்து

76 மானிட மங்கை வடிவாகி வந்துறையுங்
கானிடம் யாதென்று கண்சாத்தி—யானா

77 நலமாகும் யோசனையோர் நாற்றிசையு முத்தித்
தலமாஞ் சுகந்தவனந் தன்னு—ளலமாற

78 வான்றிகழுங் கங்கைமுதன் மங்கையார் மார்கழியிற்
றோன்றியமுற் பக்கத் துவாதசியிற்—றோன்றிகழுங்

79 கூந்த னனையக் குடைந்தாட லானதிக்கு
வேந்தனென நாமம் விளம்பியே—பாய்ந்த

80 திருமணிமுத் தாறலைக்குந் தீரத்தி னின்ற
மருமருவும் வஞ்சியின்கீழ் வைக—வருகாக

81 வானமே தாவி வளரு மகிழடியில்
ஞானமே தாவியெனு நன்முனிவன்—தானெய்திச்

மேதாவி திருமகளைத்தமக்கு அருமகளாகப் போற்றல்.

82 செய்ய கமலத்துச் செய்யவளைக் கண்டுவந்தே
யையர் பயந்தெடுத்த வன்னையார்—துய்யபெய

83 ரூரே தெனப்பெயரு மூருமிலை தந்தைதாய்
நீரே யெனமுனிவ னெஞ்சுருகிப்—பாரேத்த

84 மன்னிள வஞ்சியின்கீழ் வந்துறைத லாற்பெயரு
மென்னிள வஞ்சியா ரென்றுரைத்துத்—தன்னுழையி

85 லான வரமுனிவ னவ்வனத்துக் கொண்டிருப்ப
வானவர் தோலா வலிதோற்றுத்—தானவரால்

எம்பெருமான் மானிடவடிவாய் மாமகளைத்தேடி வருதல்.

86 விண்ணு டிழந்து விரிஞ்சனொடு கூப்பிடுநாட்
டண்ணார் துழாய்மா தவனுணர்ந்து—நண்ணார்

87 மிடைகெடுத்து மென்று விடைகொடுத்த பின்னர்க்
கிடைகெடுத்த செந்துவர்வாய்க் கிள்ளை—யடைகொடுத்த

88 புண்டரிக மாளிகைமேற் பூவை தணந்தமையு
மண்டரெலா மாற்ற லகன்றமையுங்—கண்டருளிச்

89 செந்திருவை நாடுவான் றெய்வ வடிவகற்றி
யைந்துருவ மாகி யவனிமேல்—வந்தருளி

90 யாடற் பறவை யரச னகல்விசும்புந்
தேடித் திசையனைத்துந் தேடியநா—ணீடு

91 சுகந்தவன நோக்கித் துணையாய செல்வி
யுகந்தவன மீதென் றுணர்ந்து—புகுந்தருள

மேதாவி அதிதிகளை ஆராதித்தல்.

92 மேதாவி கண்டு விருந்தளிப்ப வெவ்வுயிர்க்கு
மாதாவி னல்லான் மகிழ்ந்ததற்பின்—போதார்

93 முருகுவளை மொய்குழலை முன்றினிற் கண்டு
பெருகுவளை முன்கை பிடிப்பத்—திருமகளுந்

வந்தநம்பி கைப்பிடித்தானென்று வஞ்சுளைகூற மாமுநிசபிக்க எழுதல்.

94 காதலால் வந்தநம்பி கைப்பிடித்தா னென்றலறிக்
கோதிலா மாமுனியைக் கூவுதலும்—வேதியனுங்

95 கண்புகையச் செய்ய கதிர்கனாகக் கார்வேனில்
விண்புகைய வாய்துடிப்ப மெய்பதற—மண்புகைய

எம்பெருமான் ப்ரஸந்நனாதலும் முநிவர்துதித்துத் தம்மகளை மணஞ்செய்து கொடுத்தலும்.

96 வந்தான் கரகநீர் வாங்கிச் சபிப்பதற்கு
முந்தாமுன் சங்காழி முன்காட்டச்—சிந்தை

97 மயங்கினா னஞ்சினான் வாய்குழறிப் பார்மேன்
முயங்கினான் செங்கை முகிழ்த்தான்—றியங்கி

98 யழுதான் றளவின்மா லஞ்சலெனா வாறோர்
விழுதா மனைத்தாளில் வீழ்ந்து—முழுது

99 மறியாமை செய்தே னதுபொறுத்தி யென்ன
வெறியாழி யம்மா னிரங்கிச்—செறிதுழாய்க்

100 கோதை மணம்புணர்ந்த கொண்டலுமப் புண்டரிக
மாதை மணம்புணர்ந்து வைகியபி—னீதி

முநிவர்க்குவயமளித்து வீடருளி எம்பெருமான் சுகந்தகிரிமேல் ஆமோதல்.

101 பறந்திறம்பா நேசிய னவ்வனஞ்சேர் கைக்கும்
பிறந்தார்கள் வீடு பெறற்குஞ்—சிறந்தமலர்

102 யாமாதின் பேரே வழங்குகைக்குங் கேட்டவா
மாமா தவனுக் கருளியபின்—பூமாதைப்

103 பாமாதுள் ளிட்டார் பணிந்தேத்தப் பாற்கடலிற்
றேமா மலரோன் செவிப்படுத்த—காம

104 மறையாள னவ்வனத்து வந்தாசி னீழன்
முறையாய வேள்வி முடித்துப்—பொறையார்ந்த

105 பாதார விந்தம் பணிந்தேத்தப் பாற்கடலிற்
சீதார விந்தத் திருவினொடும்—பூதலத்தோர்

106 பேறுபெற வேபஞ்ச பேர வடிவுவந்து
வீறுபெற மாமுனிக்கும் வீடருளிக்—கூறரிய

107 ஞாலத் தெழுபத்து நான்கு சதுராயுகம
மேலத் தூடவனைப்போ னின்றபிரான்—மேயச்

### திருக்காவிரிவளனும் திருநறையூர்ச்சிறப்பும்.

108 சிகரக் குடகிரியிற் சென்றிழிந்து கீழை
மகரக் கடல்வயிறு மட்டு—மகவிடத்தின்

109 பாரங் கிழித்துப் பரவி மதகிடறி
யாரஞ் சுருட்டி யகிலுருட்டி—நார

110 நுரையெறிந்து வித்துருமக் கொத்து நுடங்கித்
திரைபெறிந்து முத்துஞ் சிதறிக்—கரையிற்

111 கொழிக்குங்கா வேரி குதித்தோடப் பாய்ந்து
சுழிக்குங்கா வேரித் துறையா—னெழிற்கருகி

112 யோங்கிப் பகலிருளை யுண்டாக்கி யேசுரும்பைத்
தாங்கிப் புயறடுத்த தண்டலையுந்—தேங்கமலப்

113 பூமிசை யன்னம் பொருந்தி வலம்புரியு
நேமியு மேந்திய நீள்கயமுங்—காம

114 ருளமகிழ வெண்ணிலா வொண்கதிரைக் கன்னல்
வளமதனை யீன்ற வயலு—மளவின்றித்

115 தன்னையே போலத் தழைப்பத் தாணிக்சோ
ரன்னையே போல வருள்செய்வான்—மன்னு

116 மருநறையூர் வீதி மணிமாடக் கோயிற்
றிருநறையூர் வாழ்வாசு தேவ—னிரணியனைப்

### நம்பியின் சிறப்புரைத்தல்.

117 பாரி லுரங்கிழித்த பன்னகத்தான் பன்னகத்தான்
வாரிநிகர் வண்ணத்தான் வண்ணத்தா—னரிடத்துக

118 தண்ணளியான் றண்ணளியான் றாழ்ந்தவன சக்கரத்தான்
கண்ணழ கார்முகத்தான் கார்முகத்தான்—விணைறுலகி

119 னல்லசுரர்க் கண்ணியா னறுதுழாய்க் கண்ணியான்
புல்லசுரர்க் குக்கொடியான் புட்கொடியான்—றொல்லிலங்கை

120 வஞ்சகனை யங்கறுத்தான் வாய்ந்தவடி வங்கறுத்தான்
கஞ்சனைமுன் கண்சிவந்தான் கால்சிவந்தான்—றுஞ்சும

121 திரையான் மலரிற் றிரையான் கவிகை
வரையான் செழுந்து வரையான்—றரையான

122 மங்கையான் வேதநிய மங்கையான் சென்னியிலோர்
கங்கையான் சூடியகாற் கங்கையான்—பங்கயக்கை

123 யாரணன் கேசவ னையியா னச்சுதன்
காரண னெம்பெருமான் காகுத்த—னாரணன்

124 யாதவன் கண்ண னிருஷீகே சன்முகுந்தன்
மாதவன் கோவிந்தன் வைகுந்தன்—ஸ்ரீதரன்

125 மாய னனந்தன் மதுசூ தனன்றிருமா
லாயன் முராரி யருளாளன்—றூயகழற்

126 றேவாதி தேவன் றிருநா யகத்தேவன்
றுவா விடர்கெடுத்த தம்பிரா—னுவாய்ப்

127 படந்திகழு மாடரவப் பாய்க்கிடந்து மேலா
மிடந்திகழ்வை குந்தத் திருந்து—நடந்து

128 பொறையூ ரடிக்கமலம் பூத்தோய வந்து
நறையூரு ணின்றருளு நம்பி—மறையூரு

நம்பி திருவிழாச்சோலைகோண்டு மண்டபத்துஅமர்தலும் வாசவராதி
யோர் வந்துபணிதலும்.

129 மாயிரம் பேழ்வா யனந்தன் பணுடவிமேன்
மாயிரு ஞால மகிழ்ந்திறைஞ்சச்—சேயிருந்தா

130 ரண்டர் குழாமு மருந்தவ ரீட்ட முந்
தொண்டர் குழாமுக தொழுதேத்தப்—பண்டைத்

131 திருவாய் மொழியுந் திருமொழியும் வேதாந்
தருவாய் மொழியுந் தழைப்ப—வொருவாத

132 திங்களு நாளுந் திருவிழா நின்றோங்க
மங்கல வெண்சங்கம் வாய்பிளிற—வங்கமர்ந்து

133 நன்பஞ்சேர் நாடகக்கா ணம்பிக்கு நாயகித
னின்பஞ்சேர் நாளி னினிதொருகா—லன்பமர்ந்து

134 தன்னிசையாற் புள்வேந்தன் சாமவே தம்பாடு
மின்னிசையாற் பள்ளி யெழுந்தருளி—மன்னிச்

135 சிலம்பு திரைமோதுந் திருமணிமுத் தாற்றி
னலம்புதிரு மஞ்சனநீ ராடி—நலம்பரவு

136 சேலை கனகமணிந்து தெய்வப் பசுந்துளப
மாலை புதிய வகைசூடிக்—கோலந்

137 தயங்குதிரு வாரா தனைகொண்ட பின்ன
ரியங்குகடற் சங்க மிசைப்பப்—பெயர்ந்தோர்

138 திருத்துமணி மண்டபத்துச் சிங்கஞ் சுமந்த
வருந்தவிசி னேறி யருளிப்—பொருந்தியநால்

139 வேதமும் வேதாந்த மெய்த்திரு வாய்மொழியு
நாதமுங் கேட்டு நயந்தருளி—யோது

140 மருண வடவரையி னம்பொழிந்துவட்டிற்
றருண மவுலி தயங்கத்—திருநாம

141 மிட்ட வதனத் தெழுதிய கத்தூரி
வட்ட மதியின் மறுவேய்ப்பக்—கிட்டரிய

142 தேங்குழைக்கீழ்க்கற்பகத்திற்செம்பாம்புசூழ்ந்ததெனப்
பூங்குழைக்கீழ் வாகு புரிதயங்க—வாங்கிப்

143 பதிக்குங் கவுத்துவமு மார்பும் பரிதி
யுதிக்கு மாகதக்குன் றொப்பக்—குதித்தொருநாட்

144 கால்வீழ்ந்த கங்கை விலங்கிக் கடிமார்பின்
மேல்வீழ்ந்த தென்னமுந்நூல் விட்டிலங்கச்—சூல்வீங்கு

145 கொண்டலின்கீழ்த் தோன்றுங் குடதிசையிற் செக்கரென
விண்டிலங்குபொன்னுடைமெய்யசையத்—தொண்டரெலாம்

146 பற்றிக் கழலவிடாப் பாதார விந்தத்தின்
வெற்றிக் கழலின் வெயிலெறிப்ப—மற்றுந்தான்

147 வேண்டும் பலகலனு மேகவடி விற்கேற்பப்
பூண்டு களபம் புயத்தணிந்து—நீண்டகடற்

148 பெண்ணூ டியதன் பெரிய திருவடிவைக்
கண்ணாடி மண்டலத்திற் கண்சார்த்தி—வண்ணத்

149 திருமாநுக்குக் கேற்றதொரு சிற்றுடைவாள் வீக்கி
யிருமருங்கு மைம்படையு மேந்தித்—திருமறுகிற்

150 போதரலு கார்கடல்சூழ் பூதலத்தும் வானத்து
மாதரரம்பையர்கள் வந்தீண்டிப்—பாதந்

151 தொழுவார் வளைகலைதானை சோர்வார் மயலா
யழுவார் [illegible] பாடுவார்—குழுவாகி

தலைவி தூது துறையுரைத்தல்.

152 யம்மாதர் சிற்ப வருவினையேன் கைதொழுதேன்
விம்மா வெதும்பா மெலிவானே—னெம்மானுக்

153 கென்னெஞ்சு மென்கலையு மென்னுணுறுஞ் சங்குமவன்
றன்னொடுஞ் சரியத் தனிதோற்றேன்—பின்னுமொரு

154 வின்னைப்ப ழுண்டென்று மெய்நடுங்கிக் கைகூப்பி
வன்னைத் துகிலொதுக்கி வாய்புதைத்துக்—கண்ணுதலாம்

155 வீரன் சிலையிறுத்த வேந்தே வினைவிளைக்கு
மாரன் சிலையிறுக்க வாராதோ—பாரமலை

156 யன்றெடுத்த கையா லழல்வீசியதென்றற்
குன்றெடுத்த போது குறையாமோ—நின்றெறிக்குஞ்

157 செய்ய கதிர்மறைக்குஞ் சீராழி யான்மதியின்
வெய்ய கதிர்மறைக்க வேண்டாவோ—கையமைத்து

158 முன்னீர் வாயடக்கு முந்நீரை யென்பொருட்டா
லின்னீர் வாயடக்கி யேலாதோ—பன்னகத்தின்

159 பூமரமே முந்துளைத்த போர்வாளி புன்குயில்வாழ்
மாமரமொன் றுந்துளைக்க வாராதோ—சேமலர்ந்து

160 மாவாய் பிளந்த மரகதமே வம்புரைப்பார்
நாவாய் பிளந்தா னகையாமோ—பூவாய்

161 தூய குருந்தொசித்த தோளாய் செவிவெதுப்பு
மாயர் குழலொசித்தா லாகாதோ—மாயமாய்க்

162 காதிச் சுழல்காற்றைக் காய்ந்தநீ வாடையாய்
வாதிச் சுழல்காற்றை மாற்றாயோ—மோதிவரும்

163 மண்ணாறு நீங்க வழிகண்ட நீயெனது
கண்ணாறு நீங்கவழி காட்டாயோ—தண்ணார்ந்த

164 தாதுதிரும் பைந்துழாய் தாராயேற் கண்ணனென
வோதுதிரு நாமமா சுண்ணாதோ—வீதிருக்க

165 நீநெடுமா லானக்கா லின்சே வடிதொழுது
நானெடுமா லாகவோ நம்பியே—மாணிலத்துப்

166 பாவையர்கைச் சங்கம் பறிப்பதற்கு நின்சங்கந்
தீவகமோ நேமித் திருமாலே—மேவத்

167 திருக்கடைக்கண் சார்த்தாய் திருவாய் மலரா
யருட்கடலே யென்னு மளவின்—மருக்கமலை

நலைவி தலைது மையலுரைத்தல்.

168 நாதன் சிறிதே நகைகோட்டி வெண்கோட்டு
மாதங்க மீதே மறைந்ததாற்—சீதரன்றன்

169 வையம் புதைக்கு மலர்கருந்தி மாரவே
ளெய்யம் புதைக்கு மிலக்கானேன்—செய்யதிறப்

170 பீதகவா டைக்கும் பெரிய திருவரைக்கும்
பாதகவா டைக்கும் பரிவானே—னுதலா

171 லந்திக் கமல னணையுங்கொ லென்றிருந்தே
னுந்திக் கமலத் துளமானேன்—கொந்துற்ற

172 கொய்துழாய் மார்பகலங் கூடுங்கொ லோவெனவே
கைதுழாய் மண்தூழித்துக் கைசோர்ந்தே—னெய்தி

173 மயனாலுங் காண வரியான் கரிய
புயனாலுங் காணமால் பூண்டேன்—வயமாரன்

174 ருதை திருப்பவளந் தான்வேட் டிடங்கொண்ட
னூதை திருப்புவள மொல்கினேன்—மாதவரை

175 பாயன் பவனிதொழு தன்றுமுத லின்றளவுந்
தூய நயனந் துயினீங்கி—யாவொறுக்கப்

176 பந்து கழன்மறந்து பாவை யினிதுறந்து
சந்து பனிநீர் தனத்தகற்றி—வெந்துயராய்ப்

177 போதக் கலனிழந்து பூவிழந்து நீரிழந்து
காதற் சிறையிருத்தல் கண்டாயே—மாதுளபத்

தலைவி தூதுசெல்ல மேகத்தீந்தத்துணிவுகூறல்.

178 தாரானை வேட்கையெல்லாந் தந்தானை முழுமதமும்
வாரானை யன்றழைக்க வந்தானைக்—காரானை

179 மெய்யானை யன்பருக்கு மெய்த்தானைக் கண்கைகால்
செய்யானை வேலையணை செய்தானை—வையமெல்லாம்

180 பெற்றானைக் காணப் பெறாதானைக் கன்மழைக்காக்
கற்றானைக் காத்ததொரு கல்லானை—பற்றார்க்கு

181 வாய்ந்தானைச் செம்பவள வாயானை னாமடிய
பாய்ந்தானை யாடரவப் பாயானைப்—பைந்துளப

182 மாமாலைக் கண்டந்த மாலைவரு முன்னமே
தேமாலை வாங்கநீ செல்லுங்காற்—பூமாயன்

183 முன்னந் தடுத்த முளரித் திருக்கரத்தா
லின்னந் தடுக்குமென வெண்ணுதே—நின்னுடைய

184 நீமுழக்க மிக்கதெனச் செங்கண்மால் கைச்சங்கின்
வாய்முழக்கங் கேட்டு மயங்காதே—நீமருவும்

185 வானச் சிலையின் வனப்புளதென் றெம்பெருமான்
கூனற் சிலைகண்டு கூசாதே—மேனிலத்து

186 மின்சோதி யெல்லாம் விழுங்குமென்று நாந்தகத்தி
னன்சோதி கண்டுமிக நாணுதே—நின்சோதி

187 மையழகி னீல மணியழகி லெம்மான்றன்
மெய்யழகு நன்றென்று வெள்காதே—துய்யமணி

தலைவி தன்செய்திகூற உபாயமுரைத்தல்.

188 யாரக் கபாட மணிக்கோயில் வாசலெலாஞ்
சேரக் கடந்து திருமுன்போய்த்—தூரத்தி

189 னின்று வணங்கி நெடிதேத்தி வாய்புதைத்துச்
சென்று பெருமான் றிருச்செவியிற்—றுன்றுகடூழ்

190 றையற் கரைசேரின் றூர்வேட் டொருபேதை
மையற் கரைசேரு மாறறியாள்—மெய்யுருகிக்

191 கொம்பனையா ளோர்விரகங் கொண்டா ளதுதன்னை
யெம்பெருமான் கேட்டருளா யேதென்னி—லம்பரமு

192 மட்புலனு முண்டுமிழ்ந்த மாயோ னுருவமல்லாற்
கட்புலனும் வேற்றுருவங் காணற்க—புட்புறத்து

193 மூர்த்தி புகழே முகப்பதல்லான் மற்றொருவர்
கீர்த்தி செவிமடுத்துக் கேளற்க— சீர்த்தரங்கப்

194 பூவெடுத்த வெண்கோட்டுப் புண்ணியனை யல்லாதென்
னாவெடுத்து வேறு நவிலற்க—கோவெடுத்த

195 கங்கை புலவுங் கழலிணைக் கல்லாதென்
செங்கை தலைமிசைபோய்ச் சேரற்க—பங்கயத்தா

196 டாக்குந் திருத்துழாய்த் தாமமண மல்லாதென்
மூக்கும் பிறிதுமண மோவற்க—மாக்கடல்போ

197 லஞ்சன வண்ண னடிக்கமல மல்லாதென்
னெஞ்சமு மொன்றை நினையற்க—செஞ்சுணங்கோ

198 டிங்கெழுந்த கொங்கை யெழுபிறப்பு மெம்பெருமான்
கொங்கணைந்த தோளல்லாற் கூடற்க—மங்கைநல்லீ

199 ரென்று வருந்தி யிருந்தா ளவளுக்குன்
மன்றல் கமழ்தார் வழங்கென்று—நின்றிரந்து

மாலைபெற்று வாவென்றல்.

200 பண்டுளவத் தாமரையாள் பற்றுந் திருமார்பின்
வண்டுளவத் தார்வாங்கி வா.

அழகியமணவாளர் அடியிணைவாழ்க.

மேகவிடுதூது முற்றிற்று.

---

☞ இம்மேகவிடுதூதை அநுஸந்திப்போர் அங்காங்குப் பொருளை ஒருவாறு எளிதி லுணரும் வண்ணம் இடையிடையே வேண்டும் தலைப் பெயர் அமைக்கப்பட்டது.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# சின்னியம்மாள் ரஹஸ்யம்.

சேற்றிற்றுமலைக்கயத்திலே ஜீயர் ஸ்ரீபாதத்திற்க - சின்னியம்மாள் வந்துதண்டம்ஸமர்ப்பிக்க, பெண்ணேயுங்கள் தேசமேது - நித்யவாஸமேது - நாடேதென்ன - திருவழுதிவளநாடென்ன, ஊரேதென்ன - திருக்குருகூரென்ன, வீடேதென்ன - பண்டுடையான்வீடென்ன, குலமேதென்ன - அச்சுதகுலமென்ன, வேதமேதென்ன - த்ராவிடவேதமென்ன, கோத்ரமேதென்ன - பராங்குச கோத்ரமென்ன, ஸூத்ரமேதென்ன - ராமாநுஜஸூத்ரமென்ன, காரிகையேதென்ன - பரகாலகாரிகையென்ன, குடியேதென்ன - அஞ்சுகுடியென்ன, பந்துக்களாரென்ன - ஆத்மபந்துக்களென்ன, உறவாரென்ன - ஒட்டவுணர்ந்தவரென்ன; உற்றாரென்ன - உற்றதுமுன்னடியாரென்ன, தகப்பனாரென்ன - தெய்வநாயகனென்ன, தாயாராரென்ன - ஸ்ரீவரமங்கையென்ன, புக்காமெவ்விடமென்ன - வானமாமலையென்ன, பர்த்தாவாரென்ன - வரமங்கைமாமுனிவனென்ன, மாமனாரென்ன - காந்தோபயந்த்ரனென்ன, உத்யோகமேதென்ன - பாகவதகைங்கர்யமென்ன, அத்தால்ப்ரயோஜநமேதென்ன - அதுவேப்ரயோஜநமென்ன, அதிகாரமேதென்ன - ஸர்வாதிகாரமென்ன, நிஷ்டையேதென்ன - பஞ்சமோபாயநிஷ்டையென்ன, உபாயமேதென்ன - சரமோபாயமென்ன, அபிமாநமேதென்ன - பாகவதாபிமாநமென்ன, ப்ரார்த்தனையேதென்ன - கைங்கர்யப்ரார்த்தனையென்றாள் * அந்த அம்மையாருடைய அத்யவஸாயத்துக்கு வானமாமலைஜீயர் மிகவுந் திருவுள்ளமுகந்து பரமபதம்ப்ரஸாதித்தருளினார்..................

வானமாமலைஜீயர் திருவடிகளேசரணம்.

———:o:———

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# எம்பார்பட்டருக்கருளிச்செய்த பத்துவார்த்தை.

ஸ்ரீவைஷ்ணவன்-சரீராவஸாநத்திலே யெம்பெருமான் திருவடிகளிலே சேரலாமென்றிருக்கை (க) அப்பேறுமவனாலே பெறவேணுமென்றிருக்கை (உ) தேவதாந்தர பஜநம்பண்ணாதொழுகை (ங) தேவதாந்தரபஜநம்பண்ணுவாரோட்டைச்சேர்த்தி வருந்தியும் தவிர்கை (ச) ஆழ்வார்களுகந்தருளின திவ்யதேசங்களிலே ப்ரவணனாய்வர்த்திக்கை (ரு) அநுகூலஸங்கலபனாயிருக்கை (சா) பகவத்பாகவதாசார்யாபசாரங்களை வருந்தியுந்தவிர்க்கை (எ) ஆழ்வார்களருளிச்செயலிலர்த்தாநுபவம் பண்ணுகை (அ) ஆழ்வார்களீரச்சொல்லிலே நெஞ்சுகிற்கும்ஸத்துக்களோடே ஸஹவாஸம் பண்ணுகை (கூ) ஆசார்யகைங்கர்யம் பண்ணுகை பண்ணநாளிழவுபட்டிருக்கையும்-பண்ணுமநாளுகந்திருக்கையும் (க0).

எம்பார்திருவடிகளேசரணம்.

# புத்தக விளம்பரம்.

## நாலாயிர திவ்யபிரபந்தவகை.

நாலாயிர திவ்யப்பிரபந்தம் இருவகை: தென்கலை, வடகலை, தென்கலை திக்குகாகிதம பெரிய எழுத்தில் அச்சிடப்பட்டது. முதலாயிரம் முதல் நாலாயிரம் வரையில், ஒவ்வொரு ஆயிரத்திற்கும், ஆங்காங்கு செய்யுளகராதியும், விஷய சூசிகைகளுடனும், ஆழ்வார்கள் வைபவங்கள் விஸ்தாரணமாகவும், ஆழ்வார்கள் படங்களும், திருவெழுக்கூற்றிருக்கை ப்ரம்மரதபடமும, திருவிருத்தத்திற்கு துறையும, அத்யாபகர்கள் நிறுத்துமிடம் குறிப்புகளும, இறட்டித்துச் சேவிக்கும பாசுரங்களுக்குக் குறிப்பும், திக்குகாகிதம் உயர்ந்த பைண்டு 2 8 0

ஷை தின்காகிதம் உயர்ந்த பைண்டு ... ரூ. 2 0 0

ஷை வடகலை சம்ப்ரதாயத் திருமண் காப்பும, வேதாந்ததேசிகன் தனியனும இயல்சாத்தும், சாத்துமுறையும், செய்யுளகராதியும படங்களும ஷை தின காகிதம .. ரூ 2 0 0

| | ரூ. | அ | ப |
|---|---|---|---|
| முதலாயிரம் செய்யுளகராதியுள்பட—மார்பில் பைண்டு .. | 0 | 9 | 0 |
| ஷை காலிகோ பைண்டு ... | 0 | 10 | 0 |
| ஷை கித்தான் பைண்டு | 0 | 12 | 0 |
| ஷை வடகலை, மாரபில பைண்டு | 0 | 9 | 0 |
| ஷை காலிகோ பைண்டு.. | 0 | 10 | 0 |
| ஷை கித்தான பைண்டு | 0 | 12 | 0 |
| பெரிய திருமொழி செய்யுகராதியுள் பட—மாரபில பைண்டு .. | 0 | 9 | 0 |
| ஷை காலிகோ பைண்டு. . | 0 | 10 | 0 |
| ஷை கித்தான் பைண்டு. | 0 | 12 | 0 |
| ஷை வடகலை மாரபில் பைண்டு ... | 0 | 9 | 0 |
| ஷை காலிகோ பைண்டு. | 0 | 10 | 0 |

| | ரூ. | அ | ப |
|---|---|---|---|
| ஷை கித்தான் பைண்டு ... | 0 | 12 | 0 |
| இயற்பா செய்யுளகராதியுள்பட-மாரபிலபைண்டு | 0 | 8 | 0 |
| ஷை காலிகோபைண்டு . | 0 | 9 | 0 |
| ஷை கித்தான பைண்டு | 0 | 10 | 0 |
| ஷை வடகலை, மாரபிலபைண்டு | 0 | 8 | 0 |
| ஷை காலிகோபைண்டு | 0 | 9 | 0 |
| ஷை கித்தான் பைண்டு . | 0 | 10 | 0 |
| திருவாய்மொழிசெய்யுளகராதியுள்பட மாரபில் பைண்டு . | 0 | 9 | 0 |
| ஷை காலிகோ பைண்டு | 0 | 10 | 0 |
| ஷை கித்தான் பைண்டு. . | 0 | 12 | 0 |
| ஷை வடகலை மாரபில் பைண்டு | 0 | 9 | 0 |
| ஷை காலிகோ பைண்டு. | 0 | 10 | 0 |

கா. வெ. திருக்கச்சிநம்பி தாஸ்.

ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய புத்தகசாலை,

திருவல்லிக்கேணி.

ஸ்ரீ

கற்புநிலைமையும்

வேதாந்த ரஹஸ்யங்களையும் விளக்கும்

# சூடாலை கதை.

இஃது

வாசிஷ்ட ராமாயணத்திலிருந்து

வே. பாலகிருஷ்ண முதலியாரால்,

மொழிபெயர்க்கப்பட்டு

ஸ்ரீமான். வி. சுந்தரம்பிள்ளை அவர்களால்,

பார்வையிடப்பட்டு

ஜவுளி வியாபாரர்

ஸ்ரீமான். ஆ. கோவிந்தராஜு முதலியாரவர்கள்

வேண்டுகோளின்படி

சென்னை திருவல்லிக்கேணி

ஆர்ந்தில் அச்சுயந்திரசாலையில் பதிப்பிக்கப்பட்டது.

1908.

ஸ்ரீ பார்த்தஸாரதி குரவே நம:

கற்புநிலைமையையும்
வேதாந்த ரஹஸ்யங்களையும் விளக்கும்,

# சூடாலை கதை.

శ్లో॥ పద్మాసనోపవిష్టం పాదయుగళే న్యస్తచైతన్యభారం
పాతస్త్వబోధముద్రం పరమాచార్యం పరాంకుశం వందే.

(சுலோகம்.
பத்மாஸநோபவிஷ்டம் பாதயுகளே ந்யஸ்த சைதந்ய பாரம்
பாதத்வ போத முத்ரம் பரமாசாரிடம் பராங்குசம் வந்தே.

மாளவ தேசத்தில், துவாபர யுகாரம்பத்தில், சிகித்துவஜ னென்னுமோர் அரசன், நீதி நெறி தவறாமல் துராசை முதலிய துர்க் குணங்களில்லாமல் உதாரமுள்ள உத்தம குணங்களை யுடைய வனாய் சமதமாதி சத்குணங்களைப் பொருந்தி மேன்மையுடன் பிரஜா பரிபாலனஞ் செய்துவந்தான். சௌராஷ்ட்டர தேசத் தரசன் குமாரத்தியாகிய சூடாலையெனும் கன்னிகையை அவன் மணம்புரிந்தான். அவள் மயிலைப்போன்றவள், சத்குணங்களில் அவளுக்கு நிகர் ஒருவருமில்லை. சகல கலைஞானங்களுங் கற்றவள், பர்த்தாவின் சேவையில் பரமப்பிரீதியுடையவளாய் அவன் மனதிற்கிசைந்து நடந்து வந்ததனால் இருவர் மனமு மொன்றாகி யினிமையுடன் வாழ்ந்திருந்தார்கள். இரண்டு சரீரங்களுக்கும் ஒரு பிராணனைப்போல இருவரும் எவ்வளகாலத்தைக் கழித்து வருமளவில் அவர்களுக்குள் விரக்தி தோன்றி விசாரிக்கத் தொடங்கினார்கள். ஓர் நிலைமையில்லாத இளமைப் பருவமானது உடைப்பட்ட கலசத்தின் ஜலம்போல ஓடிப்போமே! நீரிலிருக்கும் செந்தாமரைமேல் பனிக்கட்டி நிறைவதுபோல மூப்பு வந்துவிடுமே! கரதலஜலம்போல ஆயுள் கழிந்துவிடுமே! ஸாயங்காலத்தில் ஆற்று நீர்போல சௌந்தர்யமும் லாவண்ணியமும் போய்

விடுமே! நல்ல சுகங்களெல்லாம், வில்லைவிட்டுநீங்கின அம்புகளைப் போல, நிலமையற்று நீங்கிவிடுமே! இந்த சமுசாரத்தில் முழுது மவர்களுக்குச் சுகமுண்டோ? எதை யடைந்தால் மனமானது திரும்பி யெதிலுஞ் செல்லாதோ அந்த நிலைமை மேன்மையாம். அது அத்யாத்மஞானசாஸ்திரத்தை ஸ்திரமுடன் விசாரித்தாலுண் டாம். அது ஜனன வியாதிக்கு மருந்தாம், இதனைச்செய்யாமல் பிறப்பறுதென் றிருவரு மெண்ணி அது சர்வேஸ்வரன் திருவரு ளின்றிக் கிடையாதென்று தெரிந்து ஈஸ்வரோபாசனையைச் செய் யத்தொடங்கி அதற்கடுத்த சத்துக்கள் சார்பை அடைந்தவர்களா யும் ஆராதனைக்கேற்ற செய்கையில் இடைவிடாத பழக்கத்தை யுடையவர்களாயும் ஆசார சீலர்களாகியும் நெடுங்காலம் மிகுந்த களிப்புடன் இந்நெறியில் விளங்கினார்கள்.

இப்படியிருக்கச் சூடாலை தீவிரமான பக்குவ முடையவ ளாய், தத்துவ வித்துக்களா லனுக்கிரஹிக்கப்பட்ட சாஸ்திரார்த் தங்களை செம்மையாகக்கேட்டு, மனதி லவைகளை திருத்தமாகத்தரி த்து, உலக விவஹாரங்களை மனதில் நாட்டாமல் நல்ல வறிவினால் விசாரிக்கத் தொடங்கினாள். முதல் தன்னைநோக்கி, நானென்று எதைச் சொல்லுகின்றோம்? மனதிற்கு நீங்காத மோஹமியாது? அது யாருடையது? எந்தப்பிரகாரத்தால் எவ்விடத்திலுண்டாயி ற்றென்று தன்னுள் நினைத்து முதல் தோற்றுவதான தேஹத்தை நானென்னில் அது ஜடமாயிருப்பதனால் அதை நானென்று சொ ல்லத்தக்கதன்று. கருமேந்திரியை ஞானேந்திரியங்கள் ஜடமாகி வெவ்வேறாயிருப்பதனால் அவையும் நானன்று. தடியினால் ஓட்டை யசைக்க அது அசைவதுபோல ஹிதமாகா(சுகமாகா) மனதினால் இந்த பத்திந்திரியங்களும் சேஷ்டைசெய்யுமல்லவா? இந்த மன தும் புத்தியினால் சலனமடைந்த தாதலால் அதுவும நானல்லேன். இந்த புத்தியும் அஹங்காரத்தால் அசைவுற்றதாதலால் அதுவும் நானல்லேன். இவ்வஹங்காரமும் ஜீவனாலே தோற்றுகிறபடியால் அதுவும் நானன்று. இந்த ஜீவன் தொழிலே வடிவாய் பிராணா காரமாய் ஹிருதயத்தில் சுகுமாரமாய் பிரத்தியகாத்மாவாலே சுகிப்பனாதலால் அவனும் நானல்லேன். ஜீவனை சுகிப்பிக்கின்ற இதுவே ஆத்மதத்துவ அறிவென்றுணர்ந்தேன். விஷயங்களா லிது களங்கமடையாமல் நித்தியமான ஞானஸ்வரூபமாம். இத னால் ஜீவன் ஜீவிப்பன். இப்படி விஷயவஸ்துக்களில் பிரமிக்கி

ன்ற ஜீவனுடைய தொடர்ச்சியைச் சொல்லப்புகில் வாயுவினால்
வரும் வாசனைபோலவும் பள்ளத்திற்றங்கும் ஜலம் போலவுமாம்.
உண்மையான சித்சக்தியானது மித்தையாகிய மூடமாகிய மிருக்
கின்ற விஷயங்களின் புணர்ச்சியாய் களங்கமுள்ள ஜடரூபமாய்
ஜலத்திலிருக்கு மக்கினியைப்போல தன் உருவத்தை மறந்து ஜீவ
னாய் விஷயத்தை விரும்புதலினால் பொய்யான ஜடத்தன்மையை
வகித்திருக்கிறதே? அய்யோ! என்னவதிசயம்! இந்த ஞானம் என
க்கு தோன்றிற்றே! காலாந்தரத்தி லறியவேண்டியதை இப்போ
தே அறிந்தேனே! முதன்மையான சித்தின் வியாபகத்தை சிந்
தனை செய்யாதிருந்ததனால் கரணமுதலாகியவெல்லாம் உண்டாயி
னவன்றோ! ஆத்மஞானசிந்தனையினால் அவையாவு மசத்கல்பமே
யாயின. இப்படி பிரத்யகாத்மாவான வென்சொரூபம் எவ்விட
த்திலுமுள்ள பூரணஞான சொரூபமான பரமாத்மாவினில் அந்
தர்பூதம். இத்தை பரப்பிரம்மமென்றும் பேரறிவென்றும் சொ
ல்லுவார்கள். இது சத்தாகியும் ஸ்வயம்பிரகாசமாகியும் நித்தி
யமாகியும் பரிசுத்தமாகியும் விளங்குமென் றிவ்விதமாக சூடாலை
விசாரணைசெய்து தன் (ஆத்ம) சொரூபத்தில் நாடோறும் ரமிக்
கின்ற நிலைமையால் ஆசைகள் நீங்கி விஷய சுக மெவ்வளவு மில்
லாமல் செய்கையு மில்லாமல் பற்றில்லாத செயல்களைச் செய்து
மனம் பழுத்து தனது விவேகத்திலுண்டான பழக்கமான வெள்
ளமோட மேன்மையான புஷ்பக்கொடிபோல் விளங்கினாள்.

இப்படி சிலகாலங்கழிய சூடாலை பிரம்ம தேஜஸுடன் பிர
காசிக்க இந்தத்தேஜஸை இனிமையாக சிகித்வஜன் பார்த்து ஓகா
தலி! எவ்வனத்திலுள்ள வழகை திரும்பபெற்றவள்போலவும்,
தேவாமிர்தம் புசித்தவள்போலவும், பிரஹ்மபதத்தையடைந்தவள்
போலவும், பூரணானந்தம்பெற்றவளைப்போலவும், பேரழகையுடை
யவளாயிருக்கிறாய். போகங்களை யிச்சியாமல், உபசாந்தமாய்,
சமமாய், கம்பீரமாய் உன் மனமிருக்குந் தன்மை என்ன? இதை
நீ சொல்லக்கடவாயென்று கேட்க, சூடாலை சொல்லுவாள், பிரா
ணநாதரே! அற்பமான ஜகத்தின் வாசனையை நீக்கி மஹத்தான
ஒப்பற்ற ஞான ஸ்வரூபத்தைப்பெற்றேன். அதனால் அழகுடை
யவளாய்ப் பிரகாசிக்கின்றேன். அணுவுக்கணுவாய் உத்பத்தி
நாசமில்லாததாய் மிஞ்சுகிறதெதுவோ அதைத்தெரிந்துக்கொ
ண்டேன். போகங்களை யனுபவியாமலிருந்தும் அனுபவித்தது

போலத் தோன்றச்செய்து இராகத் துவேஷங்களை விட்டேன். சாஸ்திர திருஷ்டியில் சுகிக்கின்றேன். சங்கற்பங்களனைத்திற்கும் ஸ்வயம் பிரகாசமான தெய்வமாய் வியாபகமான வென் ஆத்மாவில் ரமிப்பேன். திரளான விச்சகலத்தையும் விட்டேன். விலக்ஷணவஸ்துவைப் பூரணமாகப்பெற்றேன். கண்களாலும் கருத்தாலும் இவ்விடத்தி லெதைப்பார்ப்பேனே அவைகளை நண்ணாமல் அவைகட்குவேறாய் அற்பமாகாதிருப்பதை யுள்ளத்திற் சுகமாகப்பார்ப்பேனதலால் அழகையுடையவளானே னென்றாள். அதைக்கேட்டவரசன் சொல்லுவான். ஏ பெண்ணே தகாதவசனத்தைக் கூறினாய். அருளில்லாதவளைப்போல மயங்குகின்றாய், மேலான வரசச்செல்வத்தில் விளங்குகின்ற நீ ஆத்மாவி லெப்படி விளங்குவாய்? ஜகத்தை முழுமையும் விட்டு, பூரண வஸ்துவையடைந்த சத்துக்கள் பிரத்தியக்ஷமாகக் காணுமதனை நீ யெப்படி அநுபவிப்பாய்? அனுபவியாத போகத்தில் அகமகிழ்ச்சி யுடையோனென்று அப்போகத்தை நீக்கிவிடும தரித்திரரைப்போல அபாக்கியவான்க ளெப்படி சுகமுடன் விளங்குவர்? ஜகத்தைப் பார்க்கிலோம். வேறே ஆத்மாவை பார்ப்போமென்று சொல்பவர்கள் இவ்வசனத்திற்கு வேறுபடாமல் அவர் விளங்குவதெப்படி? ஆதலால் பேதமை யுடையவளே! அறிவில்லாதவளாயும் சஞ்சலமுள்ளவளாயும் பலவசனங்களினாலும் சந்தோஷிக்கின்றாயென்று சொல்லி வெளிப்படச்சிரித்து அரசனனவன் வேறோரிடத்திற்குச் சென்றான். சூடாலை அரசனறியாமைக் கிறக்கமுற்று ஆத்மஞானத்தில் விஸ்ராந்தியடைந்திருந்தாள்.

பின்பு அரசனும் சூடாலையும் முன்பிருந்தாப்போல் வேற்றுமையில்லாமல் வெகுகாலஞ் சுகித்தார்கள். இவள் மேலான வைமதியுடையவளாய் ஆசையென்பது சற்று மில்லாதிருந்தும் ஆகாயகமனம் முதலாகிய சித்திகளை அடையவேண்டி சகலத்தையும்விட்டு ஏகாந்த ஸ்தானத்தில் சுகாசனமுடனிருந்து பிராண *வாயுவை நேரே மேல்நோக்கும்படியாக வெகுநாள் பழக்கஞ்செய்துவந்தாள்.

*(பஞ்சப்பிராணங்கள் மேலேறுகிறதால் அந்த வாயுக்களின்றன்மை யறிந்தடைந்தவர்களுக்கு அவை ஏவலாளிகளைப்போல ஜகத்தை யாளும்படி செய்யும், மோக்ஷத்தைக்கொடுக்கும், சகலசித்திகளை கொடுக்கும். நூறு நாடிகளில் அந்தரவேஷ்ணியொரு மோர்

இந்தப் பழக்கத்தால் ருடாலே இரேசக பூரகக் கும்பகக்கிரமத்துடன் பிராணனை நிறைந்த சரீரத்தை யுத்தேசித்து அறிவு மேல் நோக்கியதால் ஆகாயகமனஞ் சித்தித்தது. அப்படியே அணிமா முதலிய அஷ்ட சித்திகளும் அனுகூலங்களாயின.

---

நாடி குண்டலாகாரமாய் சகல ஜீவர்களிடத்தும் சரீரங்களிலெவ்விடத்துஞ் சஞ்சரிப்பதாயிருக்கும். அதனிடத்தில் குண்டலி யென்றுமோர் சக்தியானது பரிசுத்தமாய் மேலானதாயிருக்கும். அச்சத்தியினிடத்தில் நாடிகள் யாவும் கட்டுண்டிருக்கும். அது சிந்தனையால் கலையாம். ஞானத்தால் ஞானமாம். மனத்தால் மனமாம். அந்த குண்டலினிசக்தி பிராணனான வடிவமாதலின் கீழும் மேலும் வருதலும் போதலுமாயிருக்கும். அதினிடமிருக்கும் போக்குவரவை யொழித்து பிராணவாயுவை தடுத்தலினால் ஜீவர்களுக்கு நோய்வாரா. நோயானது பிராணிகளுக்கு இரண்டுவிதமாயிருக்கும். அதனை ஆதியென்றும் வியாதியென்றுஞ் சொல்லுவார்கள். அந்தக்கரண வாஸனையை ஆதியென்பார்கள். அது அஞ்ஞானத்தால் நாபி மூலத்திலுண்டாயிருக்கும். அதற்குக் காரணம் ஆசை, கோபம், அஹங்காரமேயாம். கோரின வஸ்து கிடைக்கவில்லையே! யென்ற மோஹமே ஆதியின் லக்ஷணம். இது சாரமென்றும், சாமானியமென்றும், இருவகை. உடற்பிணியை சாரமென்பர், ஜனன மெடுப்பதைச் சாமானியமென்பர். இனி வியாதியாவது மிகுந்த ஆசை வெளிபட்டு மூர்க்கபாவனை முற்றும்போது கொடிய விபகாரங்களைச் செய்தலினாலும், பொல்லாத உணவினாலும், கொடிய தேசத்தில் சஞ்சரித்தலினாலும், தீங்கான செய்கைகளாலும், துர்ஜன சங்கத்தாலும் பொல்லாத வெண்ணங்களாலும், கணுக்களுடைய தொளைகள் சிறுத்தல் பெருத்தலாலும், பிராணவாயுவோடி மிகவும் சின்னபின்ன மாகுதலாலும், தேஹத்திற்கு வியாதியுண்டாம். மனக்கலக்கத்தாலாகும் ஆதியினால் வியாதியுண்டாம். அமிர்தவஸ்து வைக்குமாயின் சார ஆதி நீங்கும். ஆத்மஞானத்தால் சாமானிய ஆதி தொலையும். மணிமந்திர ஔஷதங்களாலும், மனம் தெளிந்து ஆனந்தமடைதலாலும் வியாதிகள் நசிக்கும்.)

---

அனந்தரம் ருடாலே, தன் நாயகனுக்கு ஆனந்தாமிருதமாகிய ஞானத்தை பலதந்திரங்களாலறிவித்தும் அவனந்தப் பரிசுத்த ஞா

னத்தில் இளைப்பாறிச் சுகிக்கவில்லை. மஹா யோகினியாகிய சூடா
லையின் குணங்களை, பாலகர் கல்வியை யறியாததுபோல அரசன்
தெரியாதவனா யிருந்தான். அதைப்பற்றி அவளும் தன்னுடைய
யோகசம்பத்தைச் சொல்லாதிருந்தாள். பக்குவமாகாமுன் போ
தனை அரசனுக்கு எட்டவில்லை, இவ்விடத்திலோர் சங்கை யுண்
டாயிற்று. அதென்னவெனில், மஹா சித்திகளை யுடைய சூடா
லையே, கணவனுக்கு வருந்திச்சொல்லியும் அவன் ஞானத்தை
யடைய வில்லை என்றால் மற்றவர்களெப்படித் தெரிந்துக்கொள்
ளுவார்களென்னும் சங்கை நேர்ந்தது, அதற்குப் பரிஹாரம்
ஆசாரியோபதேசத்தில் நம்பிக்கை வைப்பது நன்மைக்கிடமாம்.
ஆத்ம ஞானத்திற்குப் பரிசுத்தமான சீஷனறிவு காரணமாகும்.
எப்படியென்றால் ஒரு வேடன் விந்தியமலைச்சார்பில் பெரிய சம்
சாரியா யிருந்தான். அவனொருதினம் புல் நிறைந்த காட்டில்
வழிபாதையி லோர் பலகரையைப் போட்டுவிட்டு அழுகையுடன்
மூன்று நாள் தேடுமளவில் சந்திரனையொத்த ஒரு இரத்தின
த்தை எதிரே கண்டான். அதுபோலப் பக்குவ காலத்திற் செய்
யும் பிரஹ்மோபதேசத்தினாலும், வேதாந்த சாஸ்திர ஞானத்தா
லும், அதினனுஷ்டானத்தாலும் ஞானமுண்டாம். இதனால் சீஷன
றிவு முயற்சிக்கும். ஆசிரியர் வாக்கு அதின் பிரயோஜனத்திற்கும்
ஹேதுவாகுமென்று கொள்ளத்தக்கது. பின்பு அரசன் ஆத்ம
ஞான மில்லாததனால் மோஹமுற்று மேன்மை பொருந்திய
சூடாலையின் சாங்கத்திய விசேஷத்தால் செல்வம் பெருங்கனமெ
ன்று அறிந்து தானங்க ளநேகமாகச்செய்தும், விரதங்களை யனு
ஷ்டித்தும், தீர்த்தங்களில முழுகியும் சுகத்தை யடையவில்லை.
தீவிர வைராக்கியத்தால் மனம் நொந்து ஒருதினத்தில் தனியே
சூடாலை அருகிலிருந்துக்கொண்டு தானடையுந் துயரமெல்லாம்
அவளுக்குச் சொல்லத் தொடங்கினான். பெண்ணே! அரசாக்ஷி
யிலும், அனுபவித்த சம்பத்திலும் இச்சையை விட்டேன். வன
த்திற்கேக விரும்புகிறேன. துன்ப வின்பங்களும் ஆபத்து சம்ப
த்துகளும் ஆரண்ணிய வாசிகளை அணுகா. இவ்விடத்திலிருக்கும்
வரைக்கும் உயிர்ச்சார்பு பொருட் சார்புகளின் பற்று நீங்காதி
ருக்கும். ஆசை யற்று ஏகாந்தத்திலிருக்கும் மனதைப் போல
பிரஹ்மேந்திராதிகளும் சந்திர சூரியர்களும் சுகமடையார்கள்.
ஆகலால் வனத்திற்குப் போகுமென்னை நீ தடுக்க வேண்டாம்.

காவலன் வார்த்தையை குலஸ்திரீகள் தள்ளாரன்றோ? என்றுரை
க்க, சூடாலை அரசனை நோக்கி பிராணநாதரே! கிழத்தனத்தால்
காயந் தளர்ந்தால் கானகத்திற் கேகலாம், எவ்வன காலத்திற்போ
வது முறைமையன்று, இவ்விடமிருந்தே சகலத்தியாகஞ் செய்யலா
மே என்றாள். அதைக்கேட்டு அரசன் ஓ பெண்ணே! நீ தடைசெ
ய்ய வேண்டாம். நான் வனத்திற்கே செல்வேன். நீ சிறியவளாத
லால் என்னுடன் வருவதற்குக் கூடாது. நீ ராஜ்யபாலனம் பண்
ணிக்கொண்டு வீட்டிலிருக்கக் கடவாய் என்று சொல்லி நீராடச்
சென்றான். பகற்காலம் போனபின்பு சந்தியாவந்தன நியமங்களைச்
செய்து மனையாளுடன் பூமிமேல் நித்திரைசெய்து அர்த்த ஜாமத்
தில் சூடாலை யுள்ளேயிருக்க மெள்ள வெழுந்து அவளறியாதபடி
வெளியே போய் தன்னைத்தெரிந்தவனைவர்களுக்கும் நகர்சோதனை
யாகச் செல்வோமென்று எல்லோரையும் நிறுத்தி பட்டணத்தினி
ன்று நீங்கி தன் சம்பத்தனைத்திற்கும் ஒருதெண்டஞ் சமர்ப்பித்து
நிறுத்திவிட்டு, தான் காட்டிற் பிரவேசித்து பன்னிரண்டு நாளில்
அநேக மலை யாறுகளையுங்கடந்து மந்தரமலைக் கருகிற்சென்று
தாமரைத் தடாகமும் பூங்காவனமும் சூழ்ந்த வனத்தில் வசித்தான்.

அவ்வனத்திலோர் பன்னகசாலையைச் செய்து ஓர் தண்டமும்
கமண்டலமும், ஜபமாலையும், வஸ்திரமும், காய் கனிகள் வைக்கத்த
குந்த பாத்திரங்களும்,மிருகசருமத்தையும்,சேகரப்படுத்தி மேலான
தவத்தைச் செய்யத் தொடங்கி, உதயமான முதற்ஜாமத்தில் சந்
தியாவந்தனமும், ஜபமும், இரண்டாம் ஜாமததில் புஷ்ப மெடுத்
தலும், மூன்றாம் ஜாமத்தில் பகவதர்ச்சனையும், நான்காம் ஜாமத்
தில் கனி காய்களைப் புசித்தலும், இரவெல்லாம் பகவந் நாமத்தை
யநுசந்தித்து இவ்வாறு அவ்வரசன் தவத்தைச் செய்து வந்தான்.
பட்டணத்தில் சூடாலை தான் படுத்திருந்த அறையில் பாதிராத்தி
ரியில் விழித்துக்கொண்டு தன் பக்கத்திலிருந்த வரசனைக் காணா
தவளாய் துன்பமடைந்து அரசன் செல்வத்தினின்று நீங்கி கான
கஞ் சென்றானென்று இரக்கத்துடன் மெலிந்து, பர்த்தாவை நீங்கி
னால் குலப்பெண்களுக்கு வேறே கதியில்லை. ஆதலால் அரச
னைக் கூடவேண்டுமென்று சிந்தித்து, பலகணிவாயலால் வெளிப்
பட்டு ஆகாயத்திற்சென்று ஒருவனாய்ச் செல்கின்ற அரசனைப் பா
ர்த்து, தனக்குள் சிந்திப்பாள். இனி நாமிப்பொழுது கணவனெ
திரே சென்று நிற்போமாயின் விபரீதமான வெண்ணத்திற் கிடங்

கொடுக்கும் ஆகையால் அவர் இனி செய்யப்போகிற காரியங்களை
யெல்லாம் விசார திருஷ்டியினால், பார்க்கவேண்டும். இப்பொ
ழுது நான் அவரைக் காண்கிறது தகுதியல்ல. இராகத்துவேஷ
ங்கள் போனபின் சேருவது நியதிமார்க்கம் என்று இவ்வாறாகச்
சிந்தித்துத் திரும்பிப் பழய வழியால் பட்டணம் வந்து, கேட்டவர்
களுக்கு அரசனோர் காரணத்தினால் வெளியே போனாரென்று
சொல்லி அரசநீதியினால் பூமியை சமதிருஷ்டியுடன் தனிமையாக
இரக்ஷித்து வந்தாள்.

சூடாலை பதினெண் வருஷங்களிவ்வண்ணம் ராஜ்ய பரிபால
னஞ்செய்து, பின்பு கணவனிடஞ்செல்லவிது தகுதியான காலமெ
ன்றுநினைத்து ஓரிராத்திரியில் வெளிப்பட்டு ஆகாயத்திற் வாயுவி
ன் தோளிமேலறி தெரியாமற்சென்று மந்தரகிரியைச் சேர்ந்தாள்.
அங்கு முத்துமாலையும், இரத்தினாபரணங்களுமில்லாமல் கறுத்து
மிளைத்து மிருக்குமோர் சரீரத்தைப் பார்த்து தன் நாயகரென்ற
றியாமல் பின்பு யோக சித்தியினால்பார்க்க, அவன் நாயகரென்
றுணர்ந்து சற்று விசனமுற்று தனக்குள் சொல்லுவாள். ஆஹா!
அறியாமைமிகவுங் கொடியது. அதனால் இவ்வரசன் துன்பமுற்
றார். ஆத்மஞானமும் மோக்ஷமும் அடையச் செய்வேன். இத்
தேஹத்துடன் அவருக்கு, கண் காக்ஷியாக நின்றால் நம் வார்த்
தையை நம்பமாட்டார். ஆதலால் வேறோர் தேஹத்தைக்கொ
ண்டு கிரமமாக போதிப்பேன். பக்குவமான பர்வமானால் இந்
நிர்மலமனதில் ஞானம் பொருந்தும். இது தகுந்த காலமென்றெ
ண்ணி ஒரு பிராம்மண குமாரனாய் ஆகாயத்திலிருந்து வந்து தன்
கணவன் முன்னிறங்கினாள். அவ்வரசன் பார்த்து சீக்கிரத்தி லெ
ழுந்து, வந்தன வழிபாடுகளைச் செய்தான். ஸ்வர்ண மயமான
வடிவும், வெண்மையான முத்துமாலையும், வெள்ளை வஸ்திரமும்
வெண் பூணூலையுடைய வப்பிராமணச் சிறுவன் பூமிக்குமேல் அந்
தரத்தில் நிற்பதைக் கண்டு அரசன் ஆசனமளித்து ஸ்வாமி! தேவ
ரெழுந்தருளக் கடவீரென்றான். அச்சிறுவனும் ஓ ராஜரிஷியே!
உம்மை வணங்கினேனென்று ஆசனத்தி லிருந்தவளவில் அரசன்
சொல்லுவான் தேவரீர் வரவால் மேன்மையான பிரயோஜனத்தை
யடைந்தேனென்று பலவித பூஜைகளைச்செய்து தன திஷ்டதே
வதை யென்று நினைத்தான். அவ்வந்தணப்பிள்ளையு மரசனை நோ
க்கி உமது குணமும் வினயமும் யாரடையப் போகின்றார்? மெது

காலம் வாழக்கடவீர், கற்பனைகளற்ற உபசாந்தமுள்ள மனதி
னால் மோக்ஷமடைய அரியதவத்தைச் செய்தீரோ? இராஜ்யத்
தை விட்டு வனத்தை மேன்மையென்று நினைத்து இவ்விடஞ் செய்
யுந் தவம் கத்திமுனையிற் செய்யுந் தவத்திற்கொப்பாமென்று சொ
ல்ல, அரசன் சொல்லுவான்; என்னுடைய நிலைமை யாவையும்
தேவரீர் கடவுளாதலா லறிந்தீர். நீர் யாருடைய புத்திரர்? உமது
நாமமென்ன? இங்கு வந்த காரியமென்ன? இவைகளைச் சொல்ல
வேண்டுமென்று கேட்க, அந்தணன் சொல்லலுற்றான்.

நாரத னென்றோ ரந்தணர் ஞானநிலைமை யுடையவராகி கங்
காதீரத்தில் சமாதி சாதனைத்தி லிருந்தார். அந்த நிஷ்டை சற்று
நேரம் நீங்கி இருக்கிற சமயத்தில் ஜலக்கிரீடையின் ஒலியைக்கே
ட்டு அத்திசையை நோக்க, சிலதேவஸ்திரீகள் புருஷர்களை சமீ
பத்திற் காணாதபடியால் வஸ்திரமில்லாமல் ஜலத்தில் விளையாடிக்
கொண்டிருந்ததைக் கண்டார். அதைக் கண்டவுடன் மனது தாவி
க்கொண்டு விவேகத்தை விட்டு சுகத்தையடைய பிராண னலை
ந்து நிற்க, மனது நழுவுதலால் இந்திரிய ஸ்கலிதமுண்டாயிற்று.
அதனைப் பளிங்கு கடத்தில்விட்டு பாலை அதில் நிறைப்பினார்.
பாற்கடலில் சந்திரன் வளர்ந்ததுபோல கருப்பமானது வளர்ந்து
சிறப்புற்றுக் கடத்திலிருந்து வெளியில் வந்த புத்திரனாகிய எனக்கு
வித்தை என்கிற சம்பத்தைக் கொடுத்து, என்னைப் பிரம்மதேவ
னிடத்திற் கொண்டுபோக, அவர் தத்துவஞானத்தை யெனக்குத்
தெரிவித்தார். கும்பத்தில் நான் பிறந்ததனால் அந்தப் பிதாம
கனால் நான் கும்பமுனியென்ற ஓர் நாமத்தை யடைந்தேன்.
சரஸ்வதி யெனக்குத் தாயாவாள், காயத்திரி சிறிய தாயாராவாள்.
நான்கு வேதங்களென்கிற சினேகிதர்களோடு லீலை செய்துக்
கொண்டு வந்தேனென்று தனது ஞானானுபவ அர்த்த விசேஷ
த்தை யோர் கட்டுக்கதையாகக் கும்பமுனி சொன்னார். அரசன்
அவரை நோக்கி, ஆசாரியரே! உம்மைத் தரிசனஞ்செய்தேன்,
அடையவேண்டிய லாபமனைத்தையும் பெற்றேனென்று சொல்ல,
கும்பமுனி அரசனைநோக்கி, ஐயா! உமக்கு முன் என் வரலாற்
றைச்சொன்னேன். நீரார்? இங்கென்னசெய்கின்றீர் என்று மு
னியானவர் கேட்க, அரசன் அச்சிறுவரைநோக்கி ஸ்வாமி! பவத்
துன்பத்திற்கு, மனதுபயந்ததனால் கானகம் புகுந்தேன். எனது நா
மம் சிகித்துவஜனென்றுரைப்பார். பட்டணத்தில் அரசாக்ஷிசெய்யுந்

தன்மையை இகழ்ந்து இவ்விடத்திலிருக்கின்றேன் ஜனனதுக்கத்தை கண்டு ஓயாமல் தவிக்கின்றேன். தவத்தொழிலுக்கு வேண்டியவற்றைச் சம்பாதித்து தவத்தை நடத்தியும் துன்பத்தை நீக்கி பின்னும் துன்பத்தையே யடைந்தேன். ஓ முனிவரே! அமுதம், நஞ்சானது போல் காண்கிறதே! இதை யறிகிலேனென்று விடைகொடுக்க, கும்பமுனி அரசனைப்பார்த்து, ஓ தராதிபரே! ஆசாரிய ரறிவிக்கும் ஞானமானது அனுபவத்திற்கு வந்தால் சுகமுண்டாம். தவத்தொழில், காலத்தைக்கழிக்கின்ற விளையாட்டல்லவோ? ஞானமில்லாதவர்க்கெல்லாம் கிரியையே கதியாம். அவை சொர்க்காதிபலனைக் கொடுக்கும். அசுத்தவாசனை கெட்டால் கிரியாப்பிரயோஜனமுமொழிந்துவிடும். யாவும் பிரம்மமென்கிற பாவனையால் அஞ்ஞானம் நீங்கும், பின்பு அசுத்தவாசனை யுண்டாகாது. வாசனையனைத்தையும் விட்டால் ஜராமரணங்களில்லாத பரமபதமுண்டாம். வாசனையுடன் சேர்ந்த மனது, வேற்றுமையான வஞ்ஞானமேயாம். வாசனை நீங்கிய மனது பிறப்புக்குக் காரணமாகாத ஞானமாம். ஞானத்தால் ஆத்மாவையறிந்து, பகவதனுபவத்தைப் பெற்றால் ஜனனமுண்டாகாது. ஞானமே மிகவும் நல்லதென்று ப்ரம்மதேவன் முதலானோர் சொல்லியிருக்க, நீரேன் அதனை விரும்பவில்லை? நான் யார்? இவ்வுலகமெப்படி யுண்டாயிற்று? இது எவ்விடத்திலிருக்குமென்று நினையாதிருந்ததென்ன? அறிவில்லாதவர்கள் போல ஏன்தளர்கின்றீர்? மேலான ஆசாரியரை வணங்கி பந்தமோக்ஷ மெவ்வண்ணமென்று ஏன் அறிந்திலீர்? பூரணஞானத்தால் சமதிருஷ்டியை யடைந்த சத்துக்களைச்சேவித்து அவர்களை விசாரித்தால் முத்தியடையும் சுக்ஷேபஞானம் கிடைக்கும் என்று சொன்னார். அதைக்கேட்டு அரசன் தன் கண்களில் ஜலம் பெருக இரக்கமுடையவனாய் கும்பமுனியைநோக்கி, ஆசாரியரே! ஏழையான நான் தேவரீரால் உணர்வை யடைந்தேன். அறியாத்தன்மையால் அறிஞருடைய சேவையைவிட்டு இந்தத்தனிமையான காட்டில் வந்தேன். தேவரீர் இவ்விடம்வந்து அடியேனை சந்தித்து உணர்த்தினீராதலால் ஆசாரியர் நீர்தான். தந்தையும் நீரே. சிநேகிதரும் நீரே. அடியேன் சிஷ்யன் உம்மை வணங்கினேன், கிருபை செய்யவேண்டும். உதாரமுள்ள வுணர்வையடைந்து துன்பங்களைப்போக்கி எந்தச் சதானந்த வஸ்துவை நீர் பெற்றீரோ அதை எனக்குச்சொல்லுவீர். தேவரீர் பிரம்மதேவ

னுக்குச் சமானரென்று சொன்னான். கும்பமுனி அரசனைப்பார்த்து, ஓ அரசனே! நான் சொல்லுவதைநீர் ஏகமனதுடன் கேட்பீரேல் உமக்கு ஞானத்தை போதிப்பேன். சொன்னதை கிரகிக்காமல் விநோதத்தால் கேட்குமவர்களுக்கு அதுபிரயோஜனத்தைக் கொடாது. இருட்டில் கண்களுக்கு உணர்வுவுண்டாமோ? என்று சொல்ல, அரசன் ஸ்வாமி! தேவரீரருளால் இவ்விட முரைக்கும் வாக்கியங்களனைத்தும் வேதநியமமென்று வுண்மையாகக் கிரகித்து செம்மையாகச் சிந்திப்பேனென்ன, கும்பமுனி அவனைநோக்கி ஒன்றுமறியாப் பாலகனுக்கு பிதா சொல்லுவதைப்போல நானுமக்குச் சொல்லும் வசனத்தைத் தடுத்துக் கேளாமல் நன்மையென்று நினைக்கக்கடவீர்.

ஓ அரசனே! இவ்விஷயத்திலோர் கதை சொல்லுகிறேன் கேளும். முற்காலத்திலொரு தனவான் கலைஞானங்கள் முதலிய சகல சாஸ்திரங்களிலும் வல்லமையுடையவனாய் ஆத்மஞானமில்லாதிருந்தான். அவன் சிந்தாமணியைப் பெறவிரும்பி அதற்காக எங்குந்தேடியு மகப்படாமல் வருத்தமுற்று தவத்தாலாவது அதனையடையவேண்டுமென்று முயற்சிசெய்து சிலநாள் தவத்தில் நின்றான். அதற்கு பிரயோஜனமாக அம்மணி கண்ணெதிரிற் றோற்றி சந்திரன்போல பிரகாசிக்கவும் அதனை கைவசப்படுத்தாமல் இது சிந்தாமணியல்ல, வேறேயொரு அற்பமணியாகும், அந்தமணி வெகுநாள் வருத்தப்பட்டு மெலியுங்காலத்திலன்றோ கிடைக்கும்? பாவிகளுக்குக் கிடைக்குமா? நானோ மனிதன், எனது தவமோ சொல்பம். வல்லமை எனக்கு கொஞ்சமுமில்லை. தரித்திரமுள்ளவன். இப்படிப்பட்ட வெனக்கு காணற்கரிய மணி எளிதாக முன்னே தோற்றுமா? இன்னமுந் தேடுவோமென்று அந்த சிந்தாமணியை யெடுக்கவில்லை. அம்மணியும் போய்விட்டது. தீயவர்களுக்கு நன்மையுண்டாமோ? திரும்பி வருத்தத்துடன் தேடினான். சிலநாள் கழிய சித்தர்கணங்களவனை பரிஹாசஞ் செய்யும்பொருட்டு உடைந்த வளையல் துண்டை அவனெதிரே யிருக்கச்செய்ய, அதனைக்கண்டு சிந்தாமணியென்று சந்தோஷித்து கைக்கொண்டு அது சகல செல்வத்தையுங் கொடுக்குமென்றெண்ணி தன்னிடமிருந்த பொருள்களனைத்தையும் நீக்கித் தானிருந்த தேசம் கொடுமையுடையதென்று நீங்கி கானகத்திலிருந்து சுகிப்போமென்று காச்சுகல்லினால் துன்பமுற்று தாழ்வை யடைந்தான்.

மற்றொரு கதையைச் சொல்லுகிறேன் கேளும். விந்திய பர்வதத்தின் சார்பிலிருக்கும் வனத்தில் ஒரு பெரிய யானை மேன்மை பொருந்தியிருந்தது. அதற்கு வஜ்ராயுதத்திற் கொப்பான தந்தங்களிருந்தன. அதனை யொரு மாவுத்தன் (யானைப்பாகன்) வசப்படுத்திக்கொண்டு இரும்பு சங்கிலியினால் கட்டி விலங்கிட்டான். அதனாலது மனஞ்சோர்ந்து நெருக்கிவைத்த கட்டுகளனைத்தையும் ஓரிரண்டு முகூர்த்தத்தில் இரண்டு தந்தங்களினாலும் கெடுத்தது, மாவுத்தனிதைக்கண்டு பனைமரத்திலிருந்து யானை மத்தகத்திற் குதித்து தவறி பூமிமேல் விழுந்தான். இதைக்கண்ட யானையானது கருணையால் கொல்லாமல் நீங்க, பின்பந்தமாவுத்தன் திரும்பியுமெழுந்து தணியாத கோபத்துடன் அந்த யானையைத் தேடிச் சென்றான். ஒரு காட்டினடுவில் அதைப்பார்த்து குழியொன்றுண்டாக்கி உலர்ந்த இலைகளினாலும் கொடிகளினாலும் அதனை மறைவு செய்து வைத்தான். யானை சிறிதுகாட் சஞ்சரித்து அவ்விடத்தில் வருகிற காலத்தில் படுகுழியில் விழுந்தது. அந்த மாவுத்தன் வந்து அதை அழுந்தக்கட்டி தன்வீட்டிற் கதைக் கொண்டுபோய் காவலில் வைத்துக்கொண்டான். முன்பு தன்முன்னே விழுந்த சத்துருவாகிய மாவுத்தனை தலைமுழு சிதறும்படி கொன்றிருந்தால் கானகத்தில கொடிய படுகுழியில் கட்டுண்டு கலங்க வேண்டியதில்லையே! அதைப்போல வர்த்தமான காலத்தில் இனிவரும் காலத்திற்காகிய காரியங்களை பாராதவர்கள துன்பத்தை யடைவார்கள்.

இவ்விரண்டு கதைகளை சிகித்துவஜன் கேட்டு கும்பமுனியை நோக்கி எனதபிதாவே! சிந்தாமணியாலும் யானையினாலும் நடந்த விருத்தாந்தங்களின் கருத்தை யறிவிப்பீரென்று கேட்க, கும்பமுனி சொல்லுவார். சாஸ்திரார்த்தங்கள் சகலமுமுணர்ந்து நன்மையான தத்வஞ்ஞான மில்லாதவன் சிந்தாமணியைத்தேடினவனும், அது வுமக்கே திருஷ்டாந்தம். நீர் எல்லா நூல்களையுங்கற்றுணர்ந்தும் உபசாந்தத்தை யடையாதிருக்கிறீர். சிந்தாமணியென்பது சகலத்தியாகமாம். அந்த சகலத்தியாகத்தைத் தேட முயற்சித்து அரசாக்ஷியை விட்டீர். இல்லாளையும் உறவினர்களையும் விட்டீர். சகலத்தியாகம் நிறைவேறுகிற சமயத்தில் விகற்பம் மனதில் வளர்ந்து வும்மை மறைக்க அது தவிர்ந்து போக, இக்காட்டிற்கு வந்தீர் அதனால் காச்சுக்கல்லை உணர்வில்லாத

விகற்பதிருஷ்டியினால் பார்த்து அது நன்மையென்று துன்பப்படு
கிறீர். கிடைத்த சுகத்தைத்தள்ளி அற்பவிஷயத்தில் மனதை
செலுத்தினவரே ஆத்மாவைக் கொன்றவர்களென்றும் வஞ்சகரெ
ன்றும் சத்துக்கள் சொல்லுவார்கள். சிந்தாமணி கிடைத்ததெ
ன்று நீயெண்ணிய சுவத்தால் தளர்வு நீங்கவில்லை, பிரயோஜனத்தை
யுமடையவில்லை. இனி யானையின் வரலாற்றைக் கேட்பீர்
யானையென்பது உம்மையே குறித்தது. வைராக்கிய விவேகங்கள்
அதனுடைய தந்தங்கள். அறியாமையான உமது குணங்களே
மாவுத்தனாகும். உம்மை மெலிவுசெய்கின்றது அஞ்ஞானமேயாகும்
அதனாலுண்டான துன்பங்களினால் யானையைப்போல் சிதறுகின்
றீர். இரும்புசங்கிலி விலங்கென்பது ஆசாபாசங்களாம். இவை
யால் நீர் கட்டுண்டீர். இரும்புசங்கிலி, காலாந்தரத்தில் தேய்ந்
தொழியும். இச்சையானது, மேலும் மேலும் உறுதியாக வளரும்.
யானை, இரும்புசங்கிலியை முன்னே முறித்ததென்றது, நீர் இஹ
லோகபோகங்களை முன்னமே வெறுத்தவிதமாகும். மாவுத்தன்
யானைமாத்திரினின்று விழுந்ததென்பது, உமது விரக்தியினால் அஞ்ஞா
னம் மழுங்கியதாகும். நீர் சகலத்தியாகமெனும் வாளினால் அவ்வ
ஞ்ஞானத்தைக் கொல்லவில்லை யாதலால் திரும்பி வளர்ந்தது.
அறியாமையினால் மிகவும் வருந்தினீர். படுகுழியென்பது, காமி
யத்துவம். இவ்விதமாக நீர் துன்பத்தையடைந்து, மாவலி சிறை
யிலடைப்பட்டு பாதாளத்தி லிருப்பதைப்போல இருக்கின்றீர்.
தவறாத வசனத்தையுடைய சூடாலை உமக்குப்பட்டணத்திலிருக்கும்
பொழுது சொன்ன ஞானவழியின்படி ஏன் சகலத்தியாகத்தைச்
செய்யவில்லையென்று கும்பமுனி கேட்க, அரசன் ஸ்வாமி! என்
பூமியையும், அரண்மனையையும், செல்வத்தையும், மனைவியையும்
விட்டேன். சகலத்தியாகமானது இவைகளை விடுகையன்றி வேறே
யாது? என்று கேட்டான். கும்பமுனி யதற்கு அரசனைநோக்கி,
ஐயா! நீர் நாடுநகரத்தை விட்டாலும் சகலத்தியாகமாகாது. சகல
த்திலு முமக்குப்பற்றுண்டு. அவ்விச்சையைவிட்டு ஆனந்தமடை
வாயென்று சொல்ல, அரசன் நாடுநகரங்களைவிட்டது சகலத்தியா
கமல்லவானால், மலைமரங்களும் நிறைந்தகாட்டையும் விட்டேனாத
லால் சகலத்தியாகஞ்செய்தேனென்று சொல்ல, கும்பமுனி காட்
டைவிடினும் சகலத்தியாகமாகாது. உமக்குத்துன்பத்தைக்கொடு
க்கும் பற்று இருக்கிறது, அது நீங்கினால் சுகமடைவீரென்று சொ

ன்றார். அதற்கு அரசன், இதுவுமல்லவானால் வஸ்திரம், தண்டம், ஜபமாலை, மான்தோல், மண்பாத்திரங்களெனக்கிருக்கின்றன இவைகளை விடுகிறேனென்று அவைகளை அக்கினியிற் கொளுத்தி மனமகிழ்ந்து வேறுருவமாய் ஆசையில்லாதவனானேன் தேவகுமாரரான உம்மால் அறிவைப்பெற்றேன் ஆஹா! துன்பத்தினின்று நீங்கினேன் கேவலமானேன் களங்கமொழிந்தேன் சகலத்தையும் நீக்கினேன், பொருள்களின் வாசனை எவ்வளவெவ்வளவு நீங்குமோ அவ்வளவவ்வளவு தெளிவுள்ள மனமானது சுகமடையும். வாசனையைஜெயித்தே அச்சுகத்தைப்பெற்றேன். பந்தங்களைப் போக்கினேன், இகம்பரனைய் தேவரீர் கிருபைசெய்யாநின்ற சகலத் தியாகத்தைப் பெற்றேன், வேறென்ன விருக்கின்றன வென்றரசன்கேட்டான். கும்பமுனி சொல்லுவார். நீர் ஒன்றையாவது நீக்கவில்லை. உமது கொண்டாட்டம் வீணென்று சொல்ல, அரசன் மனதிற் சிந்தித்து திரும்பவுஞ் சொல்லுவான். பஞ்சேந்திரியங்களென்னும் பாம்புகள் சேர்ந்திருக்கிற வெள்ளை யெலும்புகளும் மாம்சமுமான வுடலமே அடியேனைக் கிவ்விடத்தில் மிஞ்சினது, இதனை க்ஷணவில் நீக்குகின்றேன் பார்ப்பீரென்று ஓர் மலைமேலேறி அரசன் கீழ்விழுகின்ற சமயத்தில் கும்பமுனி அரசனைப்பார்த்து இவ்விடத்திலென்ன காரியம் செய்கின்றீர்? இந்த உடல் உமக்கென்ன குறைசெய்தது? இறந்துபோனால் பிரயோஜனமென்ன? பசுங்கன்றை வல்லெருது கோபிப்பதைப்போல மலையைத்தாண்டிக்குதித்துச் சரீரத்தை விட்டாலும் சகலத்தியாகமாமோ?

எதினால் சரீரஞ்சஞ்சரிக்கிறதோ, எது ஜனன கருமத்திற்கு வித்தாய் நின்றதோ அதை விடுவையாயின் எல்லாம் விட்டனவாமென்ன, அரசன் சரீரத்தை அசைத்து ஜனன பீஜமாகியவிதையெது? அதனை நீக்குவதெப்படி? யென்ன, கும்பமுனி சகலத்திலும் சார்ந்தசுகமாய் ஜீவன் பிராணனெனும் நாமங்களனேகங்களைப்பெற்று ஜடமும் அஜடமுமல்லாததாய் வியாபகமான சித்தத்தை சகலமென்று சொல்லுவார்கள். ஜகமுமிதுவே, பந்தமுமிதுவேயாகி மரத்தை அசைக்கும் வாயுவைப்போல சித்தமும் சரீரத்தை ஆட்டிவைப்பதாகும். இம்மனதைவிடுவதே சகலத்தியாகமாகும். அதேபரமானந்தம். மற்றவை யாவுந்துன்பமே. இந்த ஸகலத்தியாகத்தைச்செய்து உபசாந்தமுடையவனாய் மச்சமின்றி இயல்பான ஞானத்தினால் தெளிவடைந்தால் ஆத்மவஸ்து

னீயோவாய் என்ன, அரசன் சொல்லுவான். தேவரீர் சொல்லிய
மனதிற்கு முதல்வடிவமெது? அதை நானெப்படி தீர்ப்பதென்று
கேட்க, கும்பமுனி சொல்லுவார். மனதிற்கு வாசனையே யுருவா
ம், மனமெனும்பேர் வாசனையின் பரியாயநாமமாம். நானெனும்
அஹங்காரமே மனமென்னும் விருக்ஷத்திற்கு விதையாகும். புத்
தியே அதின் முளையாம். மனமும் சித்தமு மதின் கிளைகளாம்.
ஆனதால் இவையாவும் அஹங்காரத்தின் பேர்களாம். வினையை
யுடைய வாசனையின்கிளைகள் வெகுகாய்களைக் காய்க்கும். ஞான
மெனும் வாளால் வெட்டினால் மாய்ந்துபோம். அச்செடியின் கிளை
களை வெட்டுவது கௌணமென்பர். அதன் வேரை அறுப்பது
முக்கியமென்பர். ஆதலால் மிகுந்த நன்னெறியால் அந்த விருக்ஷ
மூலத்தை நீர் அறுத்துச்சுட்டால் மனமுண்டாகாதென்று சொல்
ல, அரசன் கேட்டு அவ்விருக்ஷத்தின் பீஜமாகிய அஹம்பாவத்
தை சுடத்தக்க அக்கினியேதென்ன, கும்பமுனி யுரைப்பார்.
நானார்? என்கிற பொதுவிசாரணைதானே மனோபீஜத்தை கெடுக்
கின்ற அக்கினியென்றார்.

அரசன் பின்பு தன்னிற்றான் விசாரித்து அநுபவமாகக்கண்
டதை விளம்பலுற்றான். பலவிதமாகச் சிந்தித்துப் பார்த்ததில் இந்
த மலவுடல் நானன்று, இந்திரியங்களும் நானன்று, மனமும்
நானன்று, புத்தியும் நானன்று, அஹங்காரமுநானன்று, என்றர
சன்சொல்ல, இவைகள் நீ அல்லவாயின் நீ வேறு யார் சொல்
வாயென்று கும்பமுனிகேட்க, அரசனவரை நோக்கி அறிவாகிய
சித்துருவா மென்னுடைய சொரூபம். இந்த (ஸ்வ) ஞானத்தி
லொருவேறுதலைக் காண்கிலேன், மனோவிருக்ஷத்தின் பீஜமாகிய
அஹங்காரத்தைப் போக்குகிற வழியறியேன், போக்கப்போக்க
ஓடிவருகின்றது. இதனால் மனந்தளர்கிறேனென்றரசன் சொல்ல.
கும்பமுனி சொல்லுவார். காரணத்தை அன்றியோர் காரியமுண்
டாகமாட்டாது. அஹம்பாவத்தின் காரணத்தைப்பார்த்து சொ
ல்லுவாயென்று வினவ, திரும்பியும் அரசன் சொல்லலுற்றான்,
அஹங்காரத்திற்குக் காரணம் ஜீவஅறிவாம். (ஸ்வஞானமல்லது
சிதாபாசஞானம்) அந்தவறிவு இவ்விடத்தில் லபிக்கும்விதமெப்
படி? திருஸ்யத்தில்போதமுண்டாவதனால் இளைக்கின்றேன், காண்
பவற்றை விடுவதெப்படியோ சொல்லுமென்ன, கும்பமுனி சொல்
லுவார். அவ்வறிவுண்டாகுங் காரணத்தை நீர் சொன்னால் பின்பு

விளங்கும் காரணத்தையும் அகாரணத்தையும் உமக்கு நான் சொல்லவேணுமென்ன, மன்னனுரைப்பான், சரீரம் முதலாகிய வஸ்துக்களிருப்பதனால் அறிவு உண்டாகிறது. அவை பொய்யானாலில்லை. அகங்காரமென்னும் மனதின் வித்தும் அடங்கிவிடுமென் றரசன் சொல்ல, முனிவருரைப்பார். சரீரம் முதலாகிய வஸ்துக்களிருந்தால் ஜீவவறிவுண்டாம். உடல்முதலானவை யில்லாதபோது அவ்வறிவு எப்படி இருக்கிறதோ சொல்லுமென்று கேட்க அரசன் சொல்வான். கை, கால், அங்கமுதலாகியதுகளால் செய்யப்பட்டு கருமபலமுள்ளதாய் அனுபவிக்கப்பட்ட சரீரமானது இல்லையென்கிற தெப்படியென் றரசன் கேட்க கும்பமுனி சொல்லுவார். கருமத்தினாலுள்ள விச்சரீரம் காரணத்தைப் பொருந்தாததனால் ஜீவவறிவெனுங் காரியமில்லையாம், அந்த அறிவு பிரமையாம். பிரமையினால் வரப்பட்டனவெல்லாம் இல்லாதனவாம். காரணமில்லாமல் வரப்பட்ட வஸ்துக்கள் கயிற்றில்வரும் சர்ப்பத்தைப்போல மித்தையாமென்ன, அரசன் இந்த ஜகத்து ஆதிமுதலுள்ள பிரம்மதேவன் உண்டாக்கிய பலசிருஷ்டியாகியிருக்கிறதே! அந்த பிரம்மா இதற்கேன் காரணமாகானென்றுகேட்க, முனிசொல்லுவார். சிருஷ்டிக்குமுன்னே கேவலமாய் உபசாந்தமாகிய பிரம்ம சொரூபமே சத்தாய்ப் பிரகாசித்தது. அவ்வொன்றைத்தவிர இரண்டில்லாக்காரணத்தால் பிரம்மாவும் காரணத்தை யடையானென்று சொல்ல, அரசன் மேலான பிரம்மமானது சதுர்முகனுக்குக் காரணமன்றோவென்ன, முனி சொல்லுவார். கேவலமாகியும், அச்சதமாகியும் அநந்தமாகியும், சாந்தமாகியும், சத்தாமாத்திரமாகியும் இறத்தல் பிறத்தல் துன்பம் தோற்றம் எப்பொழுதுமில்லாமல் பாவனையற்று அடிமுடியற்று ஒன்றாய் தன்னிநிறைந்து சொல்லவரிதாய் காணவரிதாய்ப் பரமாத்மஸ்வரூபமிருக்கும். அது எப்படி காரணமாம்? அது கர்த்தா போக்தாவாகும் விதமெப்படி? அது வினைவிது ஒன்றைச்செய்ததில்லை. இந்த ஜகத் விகாரமில்லை, சித்து மாத்திரமேயிருப்பது. அதினுடைய சங்கற்பமே சதுர்முகனும், உண்மையாக ஞானத்தைத்தவிர வேறொன்றில்லை, ஞானமாத்திரத்தினுண்டான சிருஷ்டி அந்த ஞானமேசொரூபமென்று சொல்லப்படும். இவ்விடமுள்ள சகலமும் பிரம்மமே யாதலால் கர்த்தாவும் போக்தாவும் இல்லை. உறுதியாக நிச்சயஞ்செய்து அகத்திலுள்ள வஞ்ஞானத்தைப் போக்கடித்தால் அறியாமை அழிந்ததேயாம்.

கருமநாசத்திலல்லாமல் மோகம் போகாது, அஞ்ஞானமானது நசிக்கில் ஆதிபதம் அமையும். முதற்கடவுளான பரமாத்மா வியாபகமாகிய தனது ஞானத்தினால் சங்கற்பரூபமான சிருஷ்டியைச்செய்வர். ஆத்தும தத்துவமாகியவதனாலே பிரம்மாவென்று சொல்லப்படுவது. எல்லாமாய் காணப்பட்ட விஜ்ஜுகங்கள் உபசாந்த சொரூபமேயாகுமென்றுசொன்னார். அரசன் அவ்வுபதேசமனைத்தையும் கேட்டு நீர் சொன்னயாவுமொக்குமென்றும் ஆதியில் சிருஷ்டிப்பவனில்லாததினால் ஜகமில்லை, அதினால் பல பதார்த்தத்திருஷ்டியில்லையென்றும் இவ்விதமான தோற்றத்தால் நன்றாயறிந்தேன். ஆத்மசொரூபமானேன், மற்றொன்றுந் தெரியக்காணேனென்றுசொல்லி இந்த ஞானத்தினால் சிந்தனையற்ற உபசாந்தமாகி ஆகாயத்தைப்போல நிற்கின்றேனென்று அரசன் சொல்லவுங்கும்பமுனி சொல்வார். தேசம் காலம் திக்குகளும் மனச்செயல்களுமிவையெல்லாவற்றையும் பார்ப்பது உலகத்தைப் பகுத்துப்பார்ப்பதாம். அது வெகுகாலமாயுள்ள பழக்கமாதலால் சிலநாளில் விட்டுப்போம். சாந்தத்தை யுடைய அறிவற்ற ஆத்மா அவ்விடத்தில் தனிமையாயிருக்குமென்று கும்பமுனி சொல்ல, அரசன் ஞானத்தையடைந்து மிகவும் பிரகாசித்திருந்தான். மாயையின் குகையிலிருந்து வெளிப்பட்டான். கற்பனை நீங்கும்படி ஆசாரியனருள் செய்ததைக் கருதி தன்னிலையில்நின்று மனதுங் கண்ணும் ஒருமிக்க, சொல்லற்று சொரூப சுபாவமாக நின்றான். ஒருமுகூர்த்தமிவ்வண்ணமிருந்து விழித்தவுடன் கும்பமுனி சொல்லுவார். நிர்மலமாய் நிர்விகற்பங்களுக்கெல்லாம் நிலையாகியுமிருக்கிற செல்வமிருந்த இப்பதத்தில் ஆனந்தமாகி துக்கம் நீக்கினீரோ? ஆத்மஞானத்தில் தெளிவையடைந்தீரோ? பிரமை நீங்கிற்றோ? பார்க்கவேண்டியதைப்பார்த்தீரோ வென்றுகேட்டார். அதற்கு அரசன், பகவானே! உமது கிருபையினால் மகாசம்பத்தாகிய வின்பத்தினால் மேலானதையறிந்தேன். அஹா! ஞானத்தைப்பெற்ற மஹாத்துக்களின் கூட்டங்களை யடைந்தால் தெளிவானவமுதமாம் பேரானந்தத்தை நிறையப்பெறலாமல்லவா? உமது சங்கத்தால் ஒரு பொழுதும் கிடைக்கவரியதான பராமுதத்தை அடையப்பெற்றேன். அளவில்லாத விந்தவமுதம் பூர்வத்தில் அரியதாயிருந்ததென்னவென்று கேட்க கும்பமுனி சொல்லுவார். போகத்திற் கசப்புவந்து இந்திரியங்களகத்திற்றிரும்பி மனவஞ்ஞானம் நசித்தபோதே சீவனு

டைய மனதில் மேன்மையான சற்குருவாக்கியம் கலந்து நன்மை
செய்யும். தேஹமலங்களும் விருக்ஷத்தினுடைய கனிகளைப்போல
நழுவிப்போகும். மனதில் இரண்டென்றும் ஒன்றென்றும் நினைத்
தலே அஞ்ஞானம். இவ்விரண்டு நீங்கி அனன்னியமாயிருத்தலே
ஞானமாகும். பாக்கியமதுவே. நீர் தெளிந்து முத்தி சேர்ந்தீர்.
மனதையுந் தவிர்த்தீர், ஞானசம்பத்தையுடையவருக்கு களங்கத்தை
விட்டு மௌனியாய் தரித்திருப்பீரென்று சொல்லவும், அரசன்
அவரை நோக்கி ஜீவன் முத்தர்கள் கொள்ளப்படுஞ் செயல்களை
த்தும் மனதினாலல்லவா? மனதைவிட்டு நடக்குந்தன்மை யெது
வென்று கேட்கக் கும்பமுனி சொல்லுவார். மனமென்று சொல்
லுவது வேறொன்றுமன்று. ஜனனங்களைக் கொடுக்கிற வாசனை
யே மனமாம். தன்னைத் தெரிந்துக்கொண்டால் அந்தக்கவலையில்லை.
தடையறப் பார்த்தவர்கள் கருமங்களிற் சஞ்சரிக்கினும் அது
சுத்த வாசனையாதலால் மறுபிறப்பைக் கொடாது. அம்மனதை
சத்துவமென்பர். ஞானமில்லாத மனதை மனமென்று சொல்லு
வர்கள். குற்றமற்ற ஞானிகள் சாத்வீகத்திலிருப்பார்கள். யாதொ
ன்று சொர்க்க மோக்ஷங்களாகிய வினைத்தையுந் தருகின்றதோ
அச்சகலத்தையுந் தள்ளி சமமான சுயம்பிரகாசமானால் ஏதாகின்ற
தோ இவ்விடத்தில் அது நீராவீர். அதுவே யுமது ஸ்வரூபமாகும்
ஹீனமான பதார்த்தங்கள் ஒன்றையுங் கொள்ளாமல் திடமாகவிரு
ப்பீர். மனமற்றவர்களுக்கு பிறவி வெகுதூரத்திற்செல்லும். இப்
பூமியில் துன்பமானது சற்றும் சேரிடாது. பயப்படுகின்ற மன
மானது சஞ்சலத்தினுண்டானதாகும். அசைவும் அசையாமையு
மிரண்டையு மொன்றுக்கி சஞ்சலத்தைக்கெடுத்து ஞானவடிவாகி
நிற்பீரென்று கும்பமுனிசொல்ல, அரசனவரை நோக்கி அவ்விரண்
டுக்கும் ஐக்கியமெப்படியாமென்றுகேட்க, கும்பமுனி சமுத்திரஜல
ம்போல உலகெல்லாம் ஏகமாகிய சின்மாத்திரமேயாகும். அதுதா
ன் புத்தியை கலந்ததலால் ஜலமானது போரலையினால் அசைகின்ற
தன்மையைப்போல அசைவுறும். ஆத்ம உணர்வுமாத்திரமாயும்
சத்தியமாயும் இருந்து பிரம்மம் முதலாகிய அனேக நாமங்களையு
டையதாகும். இப்படி சொல்லிய பாவஸ்துவை ஜகத்தென்று
மதித்து மூடர்கள் பார்ப்பார்கள். சித்தானது கொஞ்சமசைந்த
மாத்திரத்தில் ஜகசிருஷ்டி யுண்டாகும். அதனை நன்றாய்ப்பார்
த்தால் ஒழிந்துபோம். அறியாத்தன்மையினால் பழுதையில் பாம்

பெண்பவர் போல திருசியமாக பார்த்தார்கள். பிரத்தியக்ஷமாகிற ஞானநூல்களாலும் சாதுசங்கத்தாலும் தடையற்ற அப்பியாசத்தாலும் சிலநாள்களில் மனமானது விமலமாக சந்திரனைப்போல நின்றால் பழமையான அனுபூதிமயமாகவேயிருக்கும். ஞானசம்பத்துள்ளவர்களுக்கு இந்தப்பார்வைதோன்றும். உலகத்தின் உற்பத்தி லயத்தையும் தத்துவத்தையும் சொன்னேன். இந்த அர்த்தத்தை சுகமுண்டாக அப்பியாசித்து வழுவாமல் (நீங்குதலில்லாமல்) நேரிட்ட வினைத்தையும் மெய்ப்பதத்திற்காகச் செய்யக்கடவீர். நான் சொர்க்கத்திற்குப்போவேன். அவ்விடத்திலென் தந்தை நாரதர் என்னைக்காணாதிருந்தால் கோபிப்பார். ஓ அரசனே மயக்கமில்லாமல் வேற்றுமையைக்கெடுத்து மகிழ்ந்து இந்த நோக்கத்தில் நிற்கக்கடவீர். நாம்போவோமென்று கும்பமுனி மறைந்தனர். அரசன் நினைக்கிறான். குளிர்ச்சி, பரிசுத்தம், சாந்தம், தெளிந்த வமுத ஊற்றுக்கொப்பாகியிருக்கின்ற இந்த ஒப்பற்றபதவி எனக்குள்ளிருந்தவிதம் என்னவாச்சரியம்! குற்றமற்றவென்னை சத்துவத்தில் விஸ்ராந்தியடையச் செய்ததென்று வாசனையொன்றுமில்லாமல் அசைவற்று நிலையில்நின்று மௌனமாகி கல்லைப்போல நிர்விகற்பசமாதியில் நின்றான்.

கும்பமுனி தன்னுடைய சூடாலை வடிவத்தை யுடையவளாகி ஆகாயத்திற்போய் தன் பட்டணத்தையடைந்து அந்தப்புரத்தில் பிரவேசித்து அரசாக்ஷியில் நின்றாள். மூன்றுவருஷகால மவ்விடமிருந்து திரும்பவுங் கும்பமுனியாகி கணவனிருக்குங் காட்டையடைந்து அவனை நிர்விகற்பசமாதியில் தூணைப்போலிருக்கக்கண்டு நமது வரவை தெரிவிப்போமென்று சிங்கநதொனியினால் சத்தித்தவளவிலும் அவனறியாதிருந்தான். மேலும் மேலும் சத்தித்தும் அவனைக்கிழேதள்ளியு மறியாமலிருந்தான். இதென்னவென்று வியப்புற்று தனக்குள் ளெண்ணத்தொடங்கினாள். அரசன் ஆத்மபதத்திற்கலந்தான். இச்சரீரத்தில், அறிவிற்கு வித்தாகிய சத்துவசேஷமிருக்குமாயின் நாயகனைச்சேர்ந்து கிரமமாக வாழ்வோம், அது இல்லாவிடில் நமது பெண்ணுருவத்தைவிட்டு மறுபிறப்பை யடையாதபடி பரமபதத்தையடைவோம், இது நிச்சயமென்று சிந்தித்து, பரிசத்தாலும் கண்ணினாலும்பார்த்து அரச னிருதயத்தில் அறிவுக்கு வித்தாகிய சத்துவ அவ்வறிவு ஜீவன்முக்தி பரியந்தம் கரையாமலடங்கி நுண்ணியதாய் மிஞ்சியிருக்குமல்லவா? இது பிராரப்தானுபவ

தைக் கொடுக்குமல்லவாவென்று பரிசோதித்து சத்துவசேஷமிருக்
கக்கண்டு உடனே கும்பமுனி தன்சரீரத்தைவிட்டு குற்றமற்ற ஆதியந்
தமில்லாத அறிவினம்சமாய் அரசனிருதயத்திற்புகுந்து சத்துவசே
ஷமடைந்திருக்கின்ற அவன் மனதை அசையப்பண்ணி தனது சரீர
த்தைத் திரும்பி வந்தடைந்து பூமிமேல் ஆசனத்திலிருந்து சாமகா
னஞ்செய்துக்கொண்டிருக்க, கம்பம்போலிருந்த வரசன் தேகத்தி
ன் சத்துவ ஞானமானது அந்த ஓசையைக்கேட்டு மெல்ல மெல்ல
விரிந்தது. அவனுடையமனது வெளியாய் கும்பமுனியைக் கண்டு
களிப்புடைய மனத்துடன் அருளால் தன்னை வாழ்விக்கும்பொரு
ட்டு முன்பெழுந்தருளிய குருநாதன் சுபமாகவேவந்தாரென்று நல்ல
புட்பங்களைச்சொரிந்து வணங்கி துதிசெய்துநிற்க, கும்பமுனி அரச
னை நோக்கி உம்மை பிரிந்ததுமுதல் உம்மிட மென்மனமானது பிரிவ
ற்றிருந்தது. தெய்வலோகமும் உமது சங்கம்போல இன்பமல்ல
வென்றுசொல்ல, அரசன் அம்முனியைப்பார்த்து அண்ணலே! தே
வரீரால் வாழ்வைப்பெற்றேன், பரிசுத்தமாகிய சுகசமாதியில துன்
பமற்றேன். அவ்வானந்தம் சுவர்க்கத்திலுமில்லை. அதனை யடைந்து
மண்ணுலகிலும் பொன்னுலகிலும் உலாவுவனென்றுசொல்ல, கும்
பமுனி அவனைநோக்கி அவ்வானந்தவாழ்வில் துயரங்களைத்தம்
நீங்கசுகித்தீரோ? வென்ன, நின்னருளாலும் பகவத்கிருபையாலும்
திருசியமனைத்தும் நீங்கின. திருக்கில் மனது நிலையாயிற்று, மாயை
யின் கரைகண்டேன். கேட்கவுங் காணவும் விரும்பவுமொன்றில்லை.
துன்பத்திலிருந்து நீங்கினேன். பயமற்றேன், மயக்கமற்றேன்,
ஆசையொழித்தேன், செயலற்றேன், ஆகாயத்தைப்போலத் தெளி
வாய் உபசாந்தத்தையடைந்தேன் என்றரசன் சொன்னான்.

அப்படியே இருவரும் ஆத்துமதத்துவத்தின் விசாரணையிலும்
தெளிகின்ற வசனங்களினாலும் அன்பில் மிகுந்தவர்களாய் பகவத
னுபவத்தைப்பெற்று தங்களிற்றங்கள் கானங்களிலும் மலைகளி
லும் எவ்விடத்தும் சஞ்சரித்து சுகித்தார்கள். சுபாவஞானத்திலும்
அன்புள்ள தொழில்களிலும் இராகத்துவேஷங்களைவிட்டு இன்
புற்று சிறிதுநாள் வாழ்ந்திருக்க சூடாலை தனக்குள் நினைப்பாள்.
அரசன் அனுபூதியில் மிகவுமுறுதியுள்ளவனாய் துன்பத்திலிருந்து
நீங்கினான், இளமையும் சம்பத்தும் இராஜ வரம்பனையும் சுகிக்கின்
றவரில்லாமையால் வீணாய்ப்போகுறது, ஞானம்பெற்றோர், சுபா
வமாகவந்ததை விடுவார்களானால் தத்துவத்தை யறிந்தென்னப்

பிரயோஜனம்? கல்லியாணஞ்செய்வதற்கொரு ஸ்திரீயையிவ்விடத்திலுண்டாக்குவோ மென்று மனதில் நினைத்து நாயகனை நோக்கி கும்பமுனியான சூடாலை சொல்லுவாள், தேவலோகத்தி லின்றையதினமோர் திருவிழாவுண்டு. நாரதருட னவ்விடமிருக்க வேண்டும். சூரியனஸ்தமிக்குஞ்சமையத்தில் திரும்பி யிவ்விடம் வருவேன். நீரிவ்விட மிருப்பீரென்று, வாசனை பொருந்திய ஓர் புஷ்பக்கொத்தை அரசன் கையிற் கொடுத்து ஆகாயத்தி லெழும்பி அவன் கண்ணுக்குத் தெரியாதவரைக்கும் போய் அவ்வடிவத்தைவிட்டு சுயரூபத்துடன் யாருமறியாதபடி அரண்மனைக்குட் சென்று இராஜகாரியங்களை முறைமையாகச் செய்து திரும்பவும் கும்பமுனிவடிவமாகி நாயகனிடத்தில் வந்திறங்கி வாடிய முகத்தையுடையவள் போலாகி யிருக்குமளவில், அரசன்நோக்கி சீக்கிரமாக வெழுந்து பிரார்த்தனை செய்து எனது பிதாவே, துன்பமடைந்தவரைப் போலக் காணப்படுகின்றீர், துன்பமென்ன? உண்மைஞான மடைந்தவர்கள் தளரார்கள், சந்தோஷியார்கள், தாமரையில் ஜலம் பொருந்துமோ? என்றரசன் சொல்ல, வஞ்சவடிவத்தையுடைய கும்பமுனி சித்திரமான ஓர்சரித்திரத்தைச் சொல்லுற்றார், சமத்வமனதைச் சேர்ந்தவர்கள் தேஹமிருக்குமட்டும் கன்மேந்திரியங்களோடு பொருந்தார்களாயின் ஞானிகளல்ல, வஞ்சகராவர்கள். தானேவந்தடைகின்ற வவஸ்தைகளை ஜெயஞ்செய்யக் கருதி ஞானமில்லாதவர்கள் விருதாவாக மெலிந்துவிடுவார்கள், எள்ளுள்ளமட்டும் எண்ணெய் நீங்காததுபோல சரீரமுள்ளளவும் நாநாவிதமான அவஸ்தைகள் நீங்கமாட்டாது. இவ்வவஸ்தைகளைக் கெடுக்கவேண்டுமென்பது, அளவிடக்கூடாத வாகாயத்தை கத்தியினால் அறுப்பவர்களுக் கொப்பாகும், பிரமன் முதலாகிய யாவரும தெளிவுள்ள குணத்தையுடையவராயினும் சரீரவவஸ்தையானது நீங்காதென் றனுபவித்து வருவார்கள். ஞானியும் அஞ்ஞானியும் திருசியவஸ்துக்கள் போலிருப்பதால் சமுத்திர ஜலம் போல நியதியின் வசத்திற் செல்லுவார்கள். அதில், சமபுத்தி நிலையால் ஞானிகள் சஞ்சரிப்பார்கள். அஞ்ஞானிகள் கலக்கமுற்று சுகதுக்கங்களி லமிழ்ந்தும் அனேகதேஹங்க ளெடுத்தும் விதியைப் பின் செல்வர். நான், பட்டதுன்பங்களைக் கேளாய், புட்பக்கொத்தைக் கொடுத்து உம்மை நான் நீங்கி ஆகாயத்திற் சென்று தெய்வலோகத்தில் பிதாவையடைந்து இந்திரன் சபையினிடம் போய்

திரும்பியும் இவ்விடத்திற்கு ககனமார்க்கமாக வருமளவில் தூர்வா சரென்கிற ரிஷியை நேரே பார்த்து அவர்பாதங்களில் வணங்கி அவரைநோக்கி ஸ்வாமி! நீர் கரியவஸ்திரத்தைத் தரித்தீர், தூர்த்த புருஷனை யிச்சிக்கின்ற விபசாரி ஸ்திரீயைப்போல போகின்றீரே யென்றேன். அதற்கு அம்முனிவர் மிகவுங் கோபித்து இப்படி சொல்லுதலால் இரவுதோறும் பெண்ணுருவாயிருக்கக் கடவை யென்று எனக்கு சாபமிடவும் அவ்வசனத்தைக் கேட்டு இரக்கம டைந்து அம்முனிவர் பாதங்களைத் துதித்து வேண்டிக்கொள்ளச் சிந்தித்தேன். நொடியிலவர் மறைந்துபோனார். அதைப்பார்த் து மனம் வருந்தி இவ்விடத்தில் வந்தேன். பெண்ணாகும் குணம் எனக்கு நீங்காது. தேவ முனி கணங்களின் கூட்டங்களைக் கண்டா ல் நாணமுறாமல் இரவில் பெண்ணாகி யெப்படி இருப்பேனென்ன, அரசன் சொல்லுவான். தேவரீர் பயப்படாதிரும். புலம்புதலால் பிரயோஜனமென்ன? விதியின் வலிவால் வருவதுவரட்டும். அது சரீரத்திற் கல்லாமல் களங்கமற்ற வாத்மாவுக்குப் பொருந்தாது. ஞானத்தாலுயர்ந்த நீர் துயருறுவதென்? அறிவில்லாத மூடர்கள ல்லவா துன்பப்படுவார்களென்று தெரிவித்து தங்களிருவர்கள் பிரி யாமல் சுகதுக்கபேதமில்லாமலிருந்தார்கள். சூரியனஸ்தமித்தவே ளையில் நித்தியகருமங்களைச் செய்திருக்கக் கும்பமுனி அரசனைநோ க்கி ஐயா! யாரும் பெண்தன்மையானது என்னைச் சுற்றிக்கொண் டதென்று துன்பமுறுவாளைப் போல்காண்பிக்க, அரசன் பார்த்து நீர் தெளிவையுடைய ஞானியாயிற்றே! வரத்தக்கதுவந்தால் துன் பமேன் அடைகிறீரென்ன, கும்பமுனி இனிச்செய்யவேண்டியதெ ன்ன? தவறாத நியதியை யார்தடுப்பார்களென்று இரவில் பெண்வ டிவத்தைக்கொண்டு ஒருசயனத்தி லிருவரும் சும்மா நித்திரைசெய் தார்கள். விடிந்தவுடன் பெண்ரூபத்தைவிட்டு கும்பமுனி வடிவ மாக நிற்பன். இப்படி இரவில் பெண்ணாகவும் பகலில் கும்பமுனி யாகவும் கன்னித்தன்மை கெடாமல் சிலநாள் கூடியிருந்தனர்.

இப்படி நடந்துவர ஒருபகலில் சூடாலை கும்பமுனி வடிவத் துடன் அரசனைப்பார்த்து ஓ ராஜனே! நாள்தோறும் இரவில் பெண்தன்மை வருதலால் ஸ்திரீகளினியல்பைவிட்டு எத்தனைகால மிருப்பது? ஒருநாயகனை யடையவேண்டுமே? அன்பின் மிகுதி யால் உம்மையல்லாமல் திரிலோகத்திலும் மற்றெவரையும் நான் விரும்பேன். கலியாணத்தால் மனைவியாக வென்னை இரவுகாலந்

தோறும் வசிப்பீர். இப்படி செய்தால் நன்மை தீமையெனுமிரண்டுமில்லையென்றுசொல்ல, அரசன் நல்லதென்றிசைய, கும்பமுனி சொல்லுவார், அரசனே! இன்றைக்கு ஆவணிமாசம் பருவம், மாங்கல்லியந்தரிக்க நல்லதினம், சந்திரோதயகாலத்தில் விவாகஞ் செய்துகொள்ளுவோமென்று சொல்லி இரத்தினாபரணங்களும், சந்தனமும், பர்வதங்களிலிருந்து கொண்டுவந்து கங்கையில் ஸ்நானஞ்செய்து வேதமார்க்கத்தினால் பித்ருதேவ முனி கணங்களை வணங்கி கிரியைகளையொழியாதவரும் பலத்தை விரும்பாதவருமான இவர்கள் கற்பகவிருக்ஷங்கொடுத்த வெள்ளைப்பட்டுவஸ்திரத்தைத் தரித்து இரவிற் சந்திரோதயமானவுடன் இருவரும் காந்தர்வ விவாஹஞ் செய்துக்கொண்டார்கள்.

பின்பு அவ்விருவரும் பற்றில்லாத சுகத்தைப்புசித்து வனங்கடோறும் சஞ்சரித்துக்கொண்டிருப்பார்கள். மூன்று நாளைக்கொருதரம் அரசனை நித்திரைசெய்யும் சமயத்தில் சூடாலைப் பட்டணத்திற்கேகி அரசாங்கத்தின் காரியங்களைப் பார்த்துவந்து படுக்கையில் நீங்காதவளைப்போல திரும்பி வந்துவிடுவாள். மணம் புரிந்தது முதல் மதனிகையெனும் நாமத்தை யுடையவளாய் சிலநாள் கழித்து அரசனுக்கு இஹலோக போகங்களில் ஆசையில்லையென்றறிந்து தேவலோக போகங்களிலபேக்ஷை செலுத்துவனோவென்று பரிக்ஷை செய்யும்பொருட்டு தான் கற்ற அணிமா முதலிய சித்திகளினால் தேவர்கள் சுற்றும் சூழ்ந்துவர தேவேந்திரனை அக்கானகத்திற் றோன்றும்படி ஒருமாயை செய்ய, அவ்விந்திரனை அரசன் கண்டு நமஸ்கரித்து ஓ தேவராஜரே! நீரிவ்விடம்வர என்ன தருமத்தை நான் முன்செய்தேனோவென்று சொல்ல, இந்திரன் அரசனைப்பார்த்து ஓராஜனே! உமது நற்குணங்களைக்கண்டு தேவர்களோடு இங்குவந்தேன். சொர்க்கத்திலுமதுவரவை அவ்விடத்திய ஸ்திரீகள் எதிர்பார்த்திருக்கிறார்கள். நீர் வரக்கடவீர். கற்பகாலமட்டுமிருந்து தேவபோகங்களனைத்தையும் புசிக்கக்கடவீர். உம்மை அழைக்கவந்தேனென்று சொல்ல, அரசன் சொர்க்கத்திலுள்ள சுகங்களையெல்லாம் இவ்விடத்திலென்று மனுபவிப்பேன். இங்கு அங்கு என்னும் பேதமில்லை. அடியேனுக்கு எவ்விடத்தும் சுகமேயாம். ஆனதால் தேவலோகத்தை வேண்டேன். நீர் வாசஞ்செய்கின்ற இடத்திற்குச் செல்வீரென்று சொன்னான். தேவ சமூகங்கள் வந்தவழியே போனார்கள்.

திரும்பியுஞ் சூடாலை குரோதபுத்தி தன் கணவனுக் குண்டாமோ வென்று பரிக்ஷிக்கும் பொருட்டு தனது மாயை வித்தையினுல் ஒருதினத்தில் சந்திரோதயமான சமயத்தில் அரசன் கங்காதீரத்தில் ஜபம் செய்துக்கொண்டிருக்க சூடாலை புறம்பாகிய அங்கோரிடஞ்சென்று கொங்குமலர்களினால் நிரம்பியிருக்கு மழகிய ஒரு சயனத்தில் ஒரு தூர்த்த புருஷனைத்தானுண்டாக்கி அவனைக்கூடியிருந்தாப்போல் காண்பித்தாள். அரசன் சந்தியாவந்தனஞ்செய்து மதனிகையெனுந் தன் மனைவியை மலைப்பக்கங்களெல்லாந்தேடி வரும் மார்க்கத்தில் தூர்த்தனுடன் கூடி களிக்கின்ற அவளைப்பார்த்து விகற்பமில்லாமல் மகிழ்ச்சியுடன் விக்கினமில்லாமல் நீங்களிருங்கோளென்று சொல்லிப்போனான். பின்னர் ஒரு முகூர்த்தம் கழிந்தபின் அம்மாது வெட்கத்துடன் வணக்கமுற்றவளைப்போல் அரசன் முன் வந்து நின்றனள். அவ்வேளையி லரசன் சமாதியில் நின்றான். பின்பு தெளிவுற்றுப் பார்க்குமளவில் மதனிகையை யெதிரிலிருக்கக்கண்டு கோபமில்லாமல் சாந்த முடையவனாய் அவளை நோக்கி, ஓ மாதே! நாயகனைவிட்டுச் சீக்கிரமாக வந்ததென்ன? திரும்பிப்போய் சுகத்தை அடையக்கடவாயென்று அரசன் சொல்ல, மதனிகைக் கணவனை நோக்கி, குற்றமற்றவர்கள் மூடர்களுடைய பலகுற்றங்களைச் சஹிப்பது மேலான கீர்த்தியாம், பெண்களின் குணம் அநந்தபேதமாய் மயக்கும். ஆசையோ மட்டுப்பங்காம். ஒருகாரியமுந் தெரியமாட்டார்கள். ஆதலா லென்னுடைய தப்பிதத்தை க்ஷமித்தருள்வீரென்று சொல்ல, அரசன் ஆகாயத்தில் ஓர் மாமுண்டானாலும் கோபமென்னிடத்தில் வரமாட்டாது. சத்துருக்கள் நிந்திப்பார்களென் றுன்னுவதேயன்றி உன்னைப்பெண்ணென விரும்பவில்லை யென்று சொன்னான். தன் கணவன் சமத்துவமுள்ள திருஷ்டியிலிருந்து காமத்தையும், குரோதத்தையும், சமூலமாகக் கெடுத்தானென்றும் செல்வமும் சித்திகளுமிவனை மேலிடாவென்றும் ஞானத்தின் கரைகண்டு சேர்ந்தானென்றும் தான் மறைந்திருப்பது போதுமென்றும் நினைத்து மதனிகையுருவத்தை விட்டு தனக்கு முறைமையாயுள்ள சூடாலைவடிவத்தை யுடையவளாய் அரசன்முன் தோன்றவும், உபசாந்தமுடைய வச்சிகித்துவஜன் கண்டு அதிசயமுடையவனாய் வடிவும் வார்த்தையும் ஒடுக்கமும் இன்னமுண்டாகிய சகல குணங்களுமுடைய சூடாலையைப்போல் தோன்றினாய், நீயாரென்று நிருபன் கேட்க, நீர் கலியாணஞ்செய்

ஈ சூடாலை நானென்றுசொல்லி, கும்பமுனி வடிவத்தையும் மதனி
கை வடிவத்தையும் கொண்டு உம்மை யுணர்த்தினேன், ஞானத்
தின் நிச்சயத்தை யிவ்விடத்தில் மாயையினால் சோதனை செய்தே
ன், இவைகளை நீ நிஜானந்தத்தில் பார்ப்பாயென்று சொல்ல,
ஞானயோகமான தியானத்தால் அரசன் பார்க்க; நகரத்தை நீங்கி
னது முதலாக தன்னனுபவத்தை விளக்கின கும்பமுனியும் மத
னிகையும் தேவகணங்களும் தூர்த்தனும் யாவும் சூடாலையாக விரு
க்கப்பார்த்து தியான நீங்கி புளகிதகாத்ரனாய் சூடாலையானவள்
தயையும் ஆசையும் அபாரமாக உடையவளென்று தன் துடைமே
லிருத்திக்கொண்டு அவளைக்கையால் தழுவிக்கொண்டு வெகுநேரமி
ருந்து ஒன்றையுஞ் சொல்லாதவனாய் அரசனான சிகித்வஜன் ஆனந்
தத்தில் முழுகினான். பின்பு தன் மடியிலிருக்குமவளை நோக்கி அள
வற்ற மோஹத்திலிருந்த வென்னை விசாலவறிவினால் கரையேற்றி
னாய். உனக்கார் ஒப்பானவர்கள்? இதற் கோர் கைம்மாறு
ண்டோ? சமுசாரக்கடலைக் கடந்தவளே! நிராசையைப்பொ
ருந்துகின்ற தரும ரூபியானவளே! இதற்கென்ன பிரதியுபகாரமி
ருக்கிறதென் றரசன் சாற்ற, சூடாலை அறிவின்றி ஆரண்ணியத்தில்
வாட்டமுற்ற உம்மை கரையேற்ற வருத்தமுற்று வந்தேன். நீரி
தற்கு என்னை மேம்பாடாகச்சொல்லுவதென்ன? சங்கற்ப விகற்ப
ங்களெல்லாம் நீக்கினீரன்றோ? என்று சொல்ல, அரசன் சந்தேஹ
ம் நீங்கினேன், ஆசையற்றேன், வேற்றுமையற்றேன், சொச்ச
மான வாகாயத்துக் கொப்பானேன், மகிழ்ச்சியும் துயரமும் பொ
ருந்திலேன். இது வதுவென் றிலங்கேன், நிறைதலும் குறைதலு
மில்லாத ஒப்பற்ற ஓர் ஞானப்பிரகாச மென்னை கவரிக்கொண்
டது; வேறென்று சொல்லவறியேன்; ஆதலாலடியேனுக்கு கிரு
பைசெய்த ஆசாரியர் நீயே; உனது தாமரைமலர்போன்ற பாதத்
தை வணங்கினேனென்று சொல்ல, சூடாலை யினிசெய்யுங்காரியத்
தை சொல்லுமென்று கேட்டாள். அரசன், ஒரு பற்றுமெனக்கி
ல்லை உன்சொற்படி செய்வேனென்றான். அதற்கு சூடாலை நீரடைந்
தது இதுவானால் அஞ்ஞானமொன்றை (தேஹம் நானென்பதை)
தள்ளி முன்னுள்ள அரசியல்பி லிருப்பதே நியாயமாம். நாமப்படி
சிறிதுநாள் ஜீவன்முக்தராயிருந்து சரீராந்தத்தில் விதேஹமுக்தி
யை யடைவோமென்ன அரசனுஞ் சம்மதித்தான். பின்பு சூடாலை
யெழுந்து சித்தி சங்கற்ப நியமனத்தால் இரத்தின கும்பங்

களில் சப்தசமுத்திர ஜலத்தை தருவித்து அரசனை அபிஷேகஞ் செய்வித்து இரத்தினாசனத்தில் பிரகாசிக்கும்படி இருத்தி வாழக் கடவீரென்று சூடாலைப்பட்டாபிஷேகஞ்செய்தாள். யானை குதிரை பதாதிகளின் சமூஹமும் இரதங்களுங்கூடிய அளவற்ற படைகளை யுண்டாக்கி சூடாலையு மரசனும் யானைமேலேறி சதுரங்க சேனையுடன் பிரயாணமாகித் தாங்களரசுபுரியும் பட்டணத்தை சேர வெழுந்தருளினபோது, நகரத்திலுள்ள சதுரங்கசேனையும் சேனைத்தலைவர் முதலோர் எதிர்கொள்ள அன்புடன் பட்டணத்தை யடைந்து பதினாயிரம் வருடம் அரசன் நாயகியுடன் கூடியிருந்து அழிவில்லாத பதத்தைப்பின்பு இருவருமடைந்தனர்.

இம்முறைமையினால் தொழில்களைச்செய்துதுள்ளாநின்ற விஷய சுகமில்லாத யதார்த்த ஞானமானது சதாகாலமும் தொடர்ந்திருந்தால் தெளிவான போகமும் மோக்ஷமும் கிடைக்குமென்று தெளிந்த மனதையும் மகா தவத்தையுமுடைய வசிஷ்ட மகாமுனி ஸ்ரீராமபிரானுக்குச் சொன்னார்.

இக்கதையால் நிஷ்காமமான ஈஸ்வரோபாசனை, ஞானத்திற்குச் சாதனமென் றறியப்படும். சிகித்வஜ ராசனுக்கு முதலிலது இல்லாததனால் ஞானநுட்பம் மனதிற் படவில்லை. அவ்வுபாசனை செய்தபின் தெளிவுற்று ஞானத்தைப்பெற்று பகவதனுபவத்தில் விஸ்ராந்தியடைந்தான்.

முற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து